# அம்புலிமாமா

சிறப்புப் படைப்பாக மதிமுகம் : 107 ஜனவரி : 2004 புன்னகை : 11



மாய மந்திரவாதி 13



நவீன வேதாளக் கதை 19



இந்தியப் புராதனக் கதைகள் 26



விஷ்ணு புராணம் 45

## பொருளடக்கம்



SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**

***Remittances in favour of Chandmama India Ltd.***

to

Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail :
subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/- இந்தியாவிற்குள் ரூ.120/- புக்போஸ்டில் உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியார்டரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# பராமரித்துப் பாதுகாக்கவும்

எல்லா உயிரினங்களும் அதாவது மனிதர்களாயினும் மிருகங்களாயினும் பறவைகளாயினும் தம் உயிர் தான் மிகவும் மதிப்பானதாகக் கருதுகின்றன. தாவரங்களுக்கும் உயிர் உள்ளது. இந்த உயிரினங்கள் எல்லாம் வாழவே விரும்புகின்றன. ஆனால் மனிதனோ சில சமயங்களில் மற்ற உயிரினங்களை அழிக்கிறான். இயற்கையைப் பாழ்படுத்துகிறான். நாம் வன்முறைக்கு ஆளாகாமலும் மிருகங்களை அழிக்காமலும் இயற்கைச் செல்வத்தை ஒழிக்காமலும் இருக்க வேண்டும்.

மற்றொரு விஷயம் கூட பராமரித்துப் பாதுகாக்க வேண்டிய செல்வத்தைப் பற்றியது. அவை வரலாற்றுச் சின்னங்கள், நினைவகங்கள், மற்றும் மதிப்பு மிக்கக் கட்டடங்கள். இவை யாவும் மனிதன் சிந்தித்து உருவாக்கப்பட்டவை. அவனது உணர்ச்சிகளைப் பிரதிபலிப்பவை. மனிதனை நினைவில் கொள்ளவோ பாராட்டவோ அமைக்கப்பட்டவை.

நூறு ஆண்டுகளுக்கு முன் நம் நாடு அந்நியர்களால் ஆளப்பட்டது. ஆயினும் அவர்கள் நம் பழம் பெருமையை மதித்து வந்தார்கள். 1904இல் எல்லா வரலாற்றுச்சின்னங்களையும் நினைவகங்களையும் பாதுகாக்கச் சட்டம் இயற்றப்பட்டது. நாம் சுதந்திரம் அடைந்த பின் நம் அரசாங்கமும் சில அமைப்புகளும் எடுத்த நடவடிக்கைகளால் இந்த அரிய செல்வங்கள் நல்ல நிலையில் பழுதடையாமல் பிற்காலத்தில் உதவுபவனாக உள்ளன.

நமது பெருமைக்குரிய இந்தப் பழங்காலச் சின்னங்களைப் பராமரித்துப் பாதுகாத்து வருவோம் என்று இந்த ஆண்டில் உறுதி மொழி எடுத்துக் கொள்வோம்.

*ஆசிரியர் :* **விஸ்வம்**

Visit us at : http://www.chandamama.org






# பறவைகளின் சுதந்திரம்



**வீ**ணா, தன் பெற்றோருடன் பரத்பூர் சரணாலயம் செல்வதற்கு இரயிலில் பயணம் செய்து கொண்டு இருந்தாள். சரணாலயத்தில் கொக்கு, நாரை போன்ற பல வகை பறவைகளை காணப் போவதில் அவள் மனம் உற்சாகத்தால் நிரம்பி வழிந்தது.

பயணத்தின் போது பறவைகளைப் பற்றிய ஒரு புத்தகத்தை வீணா புரட்டிப் பார்த்துக் கொண்டு இருக்கையில், ஒரு அழகான மயிலின் படம் கண்டு மகிழ்ந்தாள். "அப்பா, பறவைகளிலேயே, மயில்தான் மிகவும் அழகாக உள்ளது. எனக்கு ஒரு மயிலைப் பிடித்து வீட்டில் வளர்க்க ஆசையாக இருக்கிறது," என்றாள்.

"உனக்கு விருப்பம் என்பதற்காக ஒரு பறவையை அது இயற்கையாக வாழும் இடத்தைவிட்டு கொண்டு வந்து நம் வீட்டுச் சிறையில் அடைத்து வைப்பது என்ன நியாயம் வீணா?" என்று கேட்டார். அப்பா கேட்ட கேள்வியில் இருந்த நியாயத்தை உணர்ந்த வீணா அதைப் பற்றி சிந்திக்க ஆரம்பித்தாள். தான் விரும்பியது தவறு என்று உணரத் தொடங்கினாள். "ஆமாம். என்னுடைய மகிழ்ச்சிக்காக, மற்ற உயிரினங்களுக்குத் துன்பம் தருவது சரியில்லை" நீங்கள் சொல்வது சரிதான் அப்பா" என்றாள் வீணா.

இதைக் கேட்ட வீணாவின் அப்பா, "வீணா, நீ புத்திசாலிப் பெண். உடனே புரிந்து கொண்டாய். இதேபோல், எல்லோரும் சிந்தித்தால், பறவைகளையும் மிருகங்களையும் பிடிப்பதும் வேட்டையாடுவதும் தவிர்க்கப்பட்டு உலகமே இனிமையாக மாறிவிடும்," என்றார். வீணா அப்பாவின் அருகில் சென்றமர்ந்து மெதுவான குரலில், "அப்பா, நான் எனது பள்ளியின் இயற்கை பாதுகாப்பு சங்கத்தில் சேர்ந்து பறவைகளைப் பிடித்து துன்புறுத்துபவர்களை தடுக்க போகிறேன்" என்று உணர்ச்சி பொங்கக் கூறினாள்.

# அது தெரியவில்லையே!

முன்பெல்லாம் கொலை, கொள்ளை, திருட்டு போன்ற கொடிய குற்றங்கள் புரிந்தவர்களுக்கு கிராம அதிகாரிகள் அவர்கள் கழுத்தில் கனமான மர உருளையை மாட்டி ஒரு பகல் முழுவதும் வெயிலில் உட்கார வைத்து வந்தார்கள்.

ஒருமுறை நாகய்யன் என்பவன் ஒரு எருதைத் திருடி காவல் வீரர்களிடம் அகப்பட்டுக் கொண்டான். கிராம அதிகாரியும் விசாரணை நடத்தி வழக்கமாகக் கொடுக்கப்படும் தண்டனையை விதிக்க ஊர் எல்லையில் அவனை உட்கார வைத்துக் கழுத்தில் கனமான மர உருளையை மாட்டி விட்டார். விதியே என்று அவன் கடும் வெயிலில் உட்கார்ந்திருந்தான்.

அப்போது அவ்வழியே வந்த முத்தப்பன் அவனைக் கண்டு ''என்னப்பா நாகா! உனக்கு ஏன் இந்த தண்டனை?'' என்று கேட்டான். நாகப்பனும் ''எல்லாம் தலைவிதி! வயலில் ஒரு கயிறு கிடந்தது என்று அதை இழுத்தேன். அதனால் தான் எனக்கு இந்த கதி'' என்றான். அதைக் கேட்ட முத்தய்யன்'' என்ன அநியாயம்! ஒரு கயிறை எடுத்ததற்காக இந்தக் கடும் தண்டனை?'' என்று கேட்டான்.

நாகப்பனும் ''வயலில் கிடந்த கயிறின் ஒரு முனையைத்தான் எடுத்து இழுத்தேன். அதன் மறு முனையில் ஒரு எருது கட்டப் பட்டிருந்தது தெரியவில்லை. நான் கயிறை இழுத்துக் கொண்டே நடக்க எருதும் என்னோடு வந்து விட்டது. இது தான் என் குற்றம்'' என்றான் அப்பாவி போல!





# அரைகுறை அறிவா!

நங்கனூரில் நல்லசிவம் ஒரு நடுத்தர விவசாயியின் குடும்பத்தில் பிறந்தவன். அவன் பல கலைகளைக் கற்று, தான் ஒரு மாமேதை என்று எல்லோரிடமும் சொல்லிக் கொள்ள ஆசைப்பட்டான். அதனால் இலக்கிம், கவிதை என்பனவற்றை பண்டிதர்களிடம் சில மாதங்கள் கற்றான். அதன் பிறகு இசை, ஓவியம் என்று கொஞ்சம் கற்றுக் கொண்டான். ஆனால் எதிலும் முழுமையாக இல்லாமல் அவன் கற்றது அரைகுறையாகத்தான் இருந்தது. இதைக் கவனித்த அவனது தந்தை பரமசிவம் ''மகனே! நீ எதையும் அரைகுறையாகத் தான் கற்றுக் கொண்டிருக்கிறாய். ஏதாவது ஒன்றில் நீ முழுமையாகத் தேர்ச்சி பெற்றால் தான் அதைக் கொண்டு நீ வாழ்க்கையில் முன்னுக்கு வரமுடியும்'' என்றான்.

நல்லசிவமோ ''அப்பா! காலம் மாறி விட்டது. இப்போது எல்லாவற்றிலும் கொஞ்சம் கொஞ்சமாவது தெரிந்து வைத்துக் கொள்ள வேண்டும். எனக்கு இப்போது தெரிந்துள்ள கலைகளைக் கொண்டே என்னால் முன்னுக்கு வந்து விட முடியும். ஆனாலும் இன்னும் பல கலைகளைக் கற்றுக் கொள்ளத்தான் போகிறேன்'' என்றான் பெருமைப்பட்டவாறே.

பரமசிவத்திற்கு பத்து ஏக்கர் நிலம் இருந்தது. ஆரம்பத்தில் இரண்டு ஏக்கர் நிலத்தை வைத்துக் கொண்டு விவசாயம் செய்த அவன் உழைத்து சம்பாதித்து மேலும் வயல்களை வாங்கி பத்து ஏகருக்குக் கொண்டு வந்து விட்டான். தன் இரு தங்கைகள் திருமணங்கள், தன் மகளின் விவாகம் என எல்லாவற்றையுமே சிறப்பாகச் செய்தான். இப்போது அவன் கவலை எல்லாம் தன் ஒரே மகனான நல்லசிவத்தைப் பற்றித் தான். ஏனெனில் நல்லசிவம் தன்னைப் பற்றிக் கூறிக் கொண்டு தலை நகருக்குப் போய்

- ரம்யா ரவி -



அங்கேயே இருந்து விட வேண்டும் என்று எண்ணியதே அதற்கு முக்கியக் காரணம்.

இப்படி இருக்கையில் நல்ல சிவத்தின் தாய் மாமன் சதாசிவம் அவனைக் காண வந்தான். அவன் தன் மகள் விசாலத்தை நல்லசிவத்திற்கு மணம் செய்து வைக்க விரும்பினான். பரமசிவத்திற்கும் அந்த சம்பந்தத் திற்கு இஷ்டமே. ஆனால் நல்ல சிவமோ ''நான் பல கலைகளைக் கற்றவன். அதனால் எனக்கு மனைவி யாக வருபவளுக்கு நான் கற்ற கலைகளில் பாதிக் கலைகளாவது தெரிந்து இருக்க வேண்டும். நான் உங்கள் மகள் விசாலத்தை மணந்து கொள்ள வேண்டும் என்றால் அவள் ஒரு சில கலைகளையாவது கற்றுக் கொள்ள வேண்டும்'' என்றான்.

அப்போது சதாசிவம் ''நீ இப்படிப் பெருமை அடித்துக் கொள்கிறாயே. யாருக்காவது உன்னைப் பற்றி உயர் வாக இந்த ஊரிலோ அல்லது வெளி ஊர்களிலோ தெரியுமா? நீ என்னென் னவோ கற்றிருப்பதாகச் சொல்கி றாயே. அதனால் யாருக்கு என்ன பயன்? நீ கற்றதைக் கொண்டு தலைநகருக்குப் போய் ஒரு அரசாங்க வேலைவாங்க ஒரு மாதத்திற்குள் முடியுமா? அப்படி உத்தியோகத்தை நீ பெற்று விட்டால் என் மகளிடம் சிலகலைக்களைக் கற்றுக் கொள்ளும் படிச் சொல்கிறேன்'' என்றான்.

நல்லசிவமும் ''நான் இப்போதே தலைநகருக்குப் போய் நொடியில் அரசாங்க வேலை பெற்று கொண்டு வருகிறேன்'' எனக் கூறி அப்போதே தலைநகருக்குச் சென்றான். அங்கு அவன் ஒரு சத்திரத்தில் தங்கினான். அப்போது முறுக்கு மீசை கனவான் ஒருவரை அவன் கண்டான். அவர் அருகே போய் நல்லசிவம் தன்னை அறிமுகம் செய்து கொண்டு ''நான் அரசாங்க உத்தியோகத்தை அடைய வந்திருக்கிறேன். நான் பல கலை களை அறிவேன் அதனால் எனக்குக் கண்டிப்பாக வேலை கிடைக்கும். என்ன சம்பளம் கேட்கலாம் என்று நீங்கள் கூறுகிறீர்களா?'' என்று கேட்டான்.

அந்த மீசைக்கார கனவானும் சற்று யோசித்து ''நீ சொன்னதைக் கொண்டு பார்த்தால் உனக்கு அரசாங்கத்தில் இப்போது ஒரு வேலையும் கிடைக் காது. உனக்குப் போர்க் கலையில்



நல்ல பயிற்சி இருந்தால் ஒரு உத்தியோகம் கிடைக்க வாய்ப்பு உள்ளது.'' என்றார். நல்லசிவமும் ''போர்க் கலையா? அது ஓரளவு தெரியும். கொஞ்சம் பயிற்சி பெற்றால் அதிலும் முழுமை பெற்று விடுவேன்'' என்றான்.

மீசைக்காரகனவானும் ''இந்த ஊரில் வீரப்பன் என்ற மாவீரன் இருக்கிறான். அவன் தகுதி உடைய வர்களை மாணவர்களாகத் தேர்ந்து எடுத்து இலவசமாகவே பயிற்சி அளிக்கிறான். நீ அவனிடம் ஒருவார காலம் பயிற்சி பெறு. அப்போது உனக்கு இப்போது காலியாக உள்ள உத்தியோகம் கிடைக்கும்'' என்றார்.

நல்லசிவமும் வீரப்பனைக் கண்டு அவனது சீடனாகி ஒருவாரகாலம் பயிற்சி பெற்று விட்டு சத்திரத்திற்குத் திரும்பி வந்தான். அப்போது அவன் முன்பு கண்ட மீசைக்கார கனவான் வருவதைக் கண்டு ஓடோடிப் போய் அவரிடம் ''நீங்கள் கூறியபடி வீரப்பனிடம் பயிற்சி பெற்று விட்டேன். இனி அந்த அரசாங்க வேலையை அடைந்து விடுவேன்'' என்று மகிழ்ச்சி ததும்பக் கூறினான்.

அதைக் கேட்ட மீசைக்காரகன வான் ''அடடா! நேற்றுத்தான் அந்த வேலையில் ஒருவரை நியமித்து விட்டார்கள். பரவாயில்லை. அரசாங்க நிதித்துறையில் ஒரு வேலை காலியாக உள்ளது. நீ வரவு செலவுக் கணக்கு எழுதுவதில் தேர்ச்சி பெற்றிருக்கிறாயா?'' என்று கேட்டார். நல்லசிவமும் ''கொஞ்சம் தெரியும்'' எனவே கனவானும் ''அது போதாது. நல்ல பயிற்சி வேண்டும். இதற்காக நீ இவ்வூரில் கணித மேதையான கணபதி பட்டரைக் கண்டு ஐந்து நாட்கள் பயிற்சி பெற்றால் அந்தக் கலையில் முழுமை பெற்று உத்தியோகம் அடைவாய்'' என்றார்.

நல்லசிவமும் கணபதி பட்டரைக் கண்டு கணக்கு எழுதுவதில் ஐந்து நாட்கள் சிறப்புப் பயிற்சி பெற்று விட்டு வந்தான். ஆனால் அவன் நிதித்துறையில் விசாரித்ததில் அந்த வேலையில் இரண்டு நாட்களுக்கு முன்புதான் ஒருவர் நியமிக்கப் பட்டுவிட்டார் என்று தெரிந்து கொண்டான். அவன் சத்திரத்திற்குத் திரும்பி வந்தபோது மீசைக்கார கனவான் இருப்பதைக் கண்டான். அவரிடம் அவன் வேலை கிடைக்

காததைக் கூறவே அவரும் ''இரு முறைகளில் அதிர்ஷ்டம் உனக்குக் கை கொடுக்கவில்லை. நீ உன் மாமனிடம் ஒரு மாதத்திற்குள் அரசாங்க உத்தியோகத்தை அடைந்து விடுவதாக வேறு கூறி இருக்கிறாய். உனக்கோ வேலை இனி கிடைக்காது. பேசாமல் உன் ஊருக்குப் போய் உன் மாமனிடம் உன் இயலாமையைக் கூறிவிடு. நீ விசாலத்தை மணந்து கொண்டு உன் தந்தைக்கு விவசாய வேலைகளில் உதவிபுரி'' என்றார்.

நல்லசிவமோ ''நான் என் தோல்வியை ஒப்புக் கொள்ள மாட்டேன். நான் கற்றது எல்லாம் வீண் போகவில்லை என்று என் மாமனுக்கு நிரூபிக்க வேண்டும். நான் என்றாவது அரசாங்க உத்தியோகத்தை அடையத் தான் போகிறேன், என்ன பந்தயம் கட்டுகிறீர்கள்?'' என்று சவால் விட்டான். அப்போது அவர் ''என்னிடம் பந்தயம் கட்டாதே. கட்டினால் நீ தான் தோற்றுப் போவாய்'' என்றார்.

நல்லசிவமும் ''அது எப்படி அவ்வளவு நிச்சயமாகக் கூறு கிறீகள்?'' என்று கேட்டான். அவரும் ''ஏனென்றால் நான்தான் இந்நாட்டு மன்னன்'' என்றார். அப்போது தான் நல்லசிவத்திற்குத் தன் எதிரே உள்ளவர் மாறு வேடத்தில் உள்ள மன்னர் என்று தெரிந்தது. உடனே அவன் அவரது கால்களில் விழுந்து வணங்கினான்.

மன்னர் கை கொடுத்து அவனை எழுப்பி நிற்க வைத்து ''இது எனக்குச் செய்யும் மரியாதை அல்ல. நான் சொல்கிறபடி நீ நடந்தால் அது தான் நீ எனக்குச் செய்யும் உண்மையான மரியாதை. நீ உன் ஊருக்குத் திரும்பிப் போ அங்கு உன் தந்தைக்கு விவசாயத்தில் உதவி புரி'' என்றார்.



அப்போது நல்லசிவம் ''அரசே! தாங்கள் தாம் என்னை நன்கு பரீட்சித்துப் பார்த்து விட்டீர்களே. எனக்கு ஒரு வேலை கொடுக்கத் தங்களுக்கு என்ன ஆட்சேபணை?'' என்று கேட்டான். அதற்கு அவர் ''நீ தற்பெருமை கொள்பவன் என்பது உன்னை நான் முதலில் சந்தித்த போதே தெரிந்து கொண்டேன். நீ எல்லாக் கலைகளையும் அறிந்து விட்டதாகக் கூறினாலும் அவற்றில் நீ எதிலும் முழுமை பெறவில்லை. நீ கற்றது அரசாங்க வேலைக்கு போதியது அல்ல என்பதை நீ உணர

வில்லை.'' என்றார். அப்போது அவன் ''நான் எதைச் செய்தாலும் மனதை ஈடுபடுத்தி விடுவேன் என்பதையும் தாங்கள் கண்டீர்களே. அதனால் நீங்கள் சொல்லும் எந்த வேலையையும் சிரத்தையுடன் செய்வேன். அதனால் நீங்கள் எந்த வேலையையாவது எனக்குக் கொடுக்கலாமே'' எனக் கெஞ்சாத குறையாகக் கேட்டான்.

மன்னரும் ''இப்போது கூறுவது போல நீ முதலில் என்னைப் பார்த்த போது சொல்லி இருந்தால் உனக்கு அரசாங்க வேலை கிடைக்கச் செய்திருப்பேன். நீ எதிலும் முழுமை அடைவதற்கு முன்பே அரசாங்க வேலையை அடைய விரும்பினாய். அது தான் நீ செய்த தவறு'' என்றார். நல்லசிவம் ''அப்போது எனக்கு நீங்கள் மன்னர் என்பது தெரிந்திருக்க வில்லை. அதனால் தான் அப்படிப் பேசி விட்டேன்'' என்றான்.

மன்னனும் ''நீ அப்போது உன்னைப் பற்றியே தம்பட்டம் அடித்துக் கொண்டிருந்தாய். உன் எதிரில் இருந்தவரைப் பற்றி எதுவுமே கேட்டு அறிந்து கொள்ள வில்லை. இது கூடத் தெரியாதவன் அரசாங்க வேலைக்குத் தகுந்தவனே அல்ல. இப்போது கூட நான் யார் என்பதை நீயாகத் தெரிந்து கொள்ள வில்லை. நானாகச் சொன்ன பிறகே தெரிந்து கொண்டாய்'' என்றார்.

அதைக் கேட்க நல்லசிவம் வெட்கித் தலை குனிந்து கொண் டான். அவன் மன்னன் கூறியபடியே நங்கனூருக்குத் திரும்பிப் போய் தந்தையோடு சேர்ந்து விவசாய வேலைகளைச் செய்து அவற்றை நன்கு தெரிந்து கொண்டான். அதன் பின் அவன் தன் மாமன் மகள் விசாலத்தை மணந்து கொண்டு சுகமாக வாழ்ந்தான். தலை நகரிலி ருந்து வந்த பின் அவன் தன்னைப் பற்றியே சொல்லிக் கொண்டிருப் பதை நிறுத்தி விட்டதோடு தான் கற்ற கலைகளை மற்றவர்களுக்கும் கற்றுக் கொடுத்து மகிழ்ச்சி அடைந்தான்.





# மாய மந்திரவாதி

## 2

*(காளிவர்மன் என்ற க்ஷத்திரிய இளைஞன் மன்னனின் படையில் சேரத் தன் ஊரிலிருந்து தலைநகருக்குப் புறப்பட்டான். வழியில் ஒரு கிராமத்தினர் கொள்ளைக்காரர்களின் தொல்லைகள் பற்றி அவனிடம் தெரிவிக்கவே. காளிவர்மன் இளைஞர்களின் உதவியுடன் கொள்ளைக்காரர்களை அடித்துத் துரத்தினான். அதன் பிறகு அவன் தலைநகரை அடைந்தபோது ஜிதகேது மன்னனின் காவல் வீரர்கள் அவனைச் சூழ்ந்து நின்றார்கள். அதன் பிறகு-)*

**கா**ளிவர்மனைப் பிடித்த வீரர்கள் அவனை ஒரு குதிரையின் முதுகோடு கட்டிப் பல தெருக்கள் வழியாக அரண்மனைக்குக் கொண்டு சென்றார்கள். வழி நெடுக மக்கள் அதைப் பார்த்து ஆச்சரியப் பட்டார்கள். ஓரிருவர் அவ்வீரர்களின் தலைவனிடம் ''இவர் யார்? என்ன குற்றம் செய்தார் என்று இப்படி இழுத்து கொண்டு போகிறீர்கள்?'' என்று கேட்டார்கள். அத்தலைவனும் ''இவன் ராஜத்துரோகி. காட்டில் ஒளிந்திருந்த இவனை கண்டு பிடித்துத் துரத்திப் பிடித்தேன். இவனை விசாரித்து தண்டனை கிடைக்கச் செய்ய அரண்மனைக்குக் கொண்டு செல்கிறோம்'' என்று மீசையை முறுக்கியவாறே பெருமை அடித்துக் கொண்டான்.

சந்திரசிலா நாட்டிற்கும் உதய கிரிக்கும் இடையே நெடு நாட்களாகப் பகைமை இருந்து வந்தது.



அந்நாட்டு மன்னன் தம் நாட்டின் மீது படை எடுத்து வரப்போகிறான் என்ற வதந்தியைக் கேட்ட சந்திரசிலா மக்கள் பயந்திருந்தார்கள். காவல் தலைவன் கூறியதைக் கேட்ட அவர்கள்'' இவன் துரோகியா? இவன் பெயர் என்ன?'' என்று கேட்க அத்தலைவனும் ''இந்தப் பொல்லாத வனின் பெயர் காளிவர்மன்'' என்று கூறியவாறே சென்றான். மக்கள் கூட்டமும் அந்த விசாரணையைப் பார்க்க அரண்மனைக்குச் சென்றது.

காவல் வீரர் தலைவன் தன் வீரர்களிடம் ''நீங்கள் இங்கேயே இவனுக்குக் காவலாக இருங்கள். நான் உள்ளே போய் மன்னரின் அனுமதி பெற்று வருகிறேன்'' எனக் கூறி விட்டு அரண்மனைக்குள் சென்றான். மன்னனிடம் காளிவர் மனைப் பற்றி அத்தலைவன் கூறியது தெரிவிக்கப்பட்டது. அப்போது மன்னன் தன் முதலமைச்சருடன் உதயகிரி மன்னன் படை எடுத்து வரப்போவது பற்றி பேசிக் கொண்டிருந்தான். இச்சமயத்தில் காவல் வீரர்தலைவன் சொல்லி அனுப்பிய செய்தி அவனுக்குக் கிடைக்கவே அவன் ஒரேயடியாக மகிழ்ந்து போய் முதலமைச்சரிடம் ''இந்தக் காளி வர்மன் செய்த விஷமத்தால் இந்தப் படையெடுப்பு நடக்கிறது. இதற்குக் காரணமாக உள்ள இந்தக் காளி வர்மனை உதயகிரி மன்னனிடம் ஒப்படைத்து விட்டால் இந்தப் படையெடுப்பைத் தடுத்து விடலாம். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

முதலமைச்சரும் ''இந்தக் காளி வர்மனை உதயகிரி மன்னன் துன் முகனிடம் அனுப்புவதற்கு முன் இவன்தான் கொள்ளைக்காரர்களை அந்த நாட்டிற்குள் விரட்டியவனா என்பதை நாம் உறுதிப் படுத்திக் கொள்ள வேண்டும். அதனால் மேலும் பல பிரச்சினைகள் உருவா வதைத் தவிர்க்கலாம்'' என்றான். அதற்கு மன்னன் ''இவன் தான் காளிவர்மன் என்று நம் காவல் வீரர் தலைவன் கூறுகிறானே'' என்றான். அமைச்சரும் ''அவன் சொல்லலாம். ஆனால் காளிவர்மன் என்ற பெயர் கொண்டவர்கள் இந்த நாட்டில் எவ்வளவோ பேர்கள் இருக்கி றார்கள். எனவே தீரவிசாரித்து முடிவு எடுப்போம்'' என்றார்.

மன்னனும் காளிவர்மனை விசார ணைக்கு தர்பார் மண்டபத்திற்குக்

கொண்டு போகும்படி காவல் வீரர் தலைவனுக்குச் செய்தி அனுப்பி விட்டு முதலமைச்சருடன் தர்பார் மண்டபத்திற்குச் சென்றான். அங்கு மக்கள் கூட்டம் நிரம்பி வழிந்தது. காளிவர்மன் அழைத்து வரப்பட்டு மன்னன் முன் நிறுத்தப் பட்டான். அவனது கட்டுகளை அவிழ்த்து விடும்படி முதலமைச்சர் கட்டளை இட்டார்.

காளிவர்மன் மன்னன் முன் நின்றதும் சற்றும் பயப்படாமல் ''அரசே! காவல் வீரர்கள் என்னை ஏன் இப்படிச் சித்திரவதை செய்கிறார்கள்? கொள்ளைக் காரர்களை நான் அடித்து விரட்டியது குற்றமா?'' என்றான். அதைக்கேட்ட முதல் அமைச்சார் ''ஏய் அதிகப்பிரசங்கி! நீ யார் மக்களுக்கு நன்மை செய்ய? அதற்கு அரசாங்கம் இருக்கிறது. அதிகாரிகள் இருக்கிறார்கள். மன்னர் இருக்கிறார். நீ தான் காளிவர்மனா? காட்டிலிருந்த கொடிய கொள்ளைக் காரர்களை அண்டை நாடான உதயகிரிக்கு விரட்டியவன் நீயா?'' என்று அதிகாரத்துடன் கேட்டார்.

காளிவர்மனும் ''ஆம் நான் காளிவர்மனே. கொள்ளைக்காரர்கள் நம் கிராமங்களில் புகுந்து மக்களைத் துன்புறுத்தும் போது அரசாங்கம் அவர்களை அடக்கி இருக்க வேண்டும். அதைச் செய்ய மன்னர் தவறி விட்டார். எனவே மக்கள் நலனுக்காக அதை நான் செய்தேன்'' என்று கூறினான். முதலமைச்சரும் ''நீ தான் கொள்ளைக்காரர்களை உதய



கிரிக்கு விரட்டியவனா? இதனால் அந்நாட்டு மன்னன் கோபம் கொண்டு நம் நாட்டின் மீது படை எடுத்து வந்து கொண்டிருக்கிறான். அவன் இப்படி செய்ய நீதான் காரணம். எனவே இது நீ செய்த தேசத்துரோகம். இதற்காக மன்னர் உனக்கு மரண தண்டனை விதிக்கிறார். வீரர்களே! இவனை கொலைக் களத்திற்கு இழுத்துப் போய் தூக்கில் போடுங்கள்'' என்று கடும் குரலில் கூறினார்.

இதைக் கேட்டதும் அங்கு கூடியிருந்த மக்களிடையே சலசலப்பு ஏற்பட்டது. சிலர் ''இது அநியாயம். இவருக்குக் கொடுத்த தண்டனையை ரத்து செய்யுங்கள்'' என்று கூவி னார்கள். முதலமைச்சரோ ''மன் னரின் கட்டளையை எதிர்ப்பதும் ராஜத் துரோகமே. யார் இப்படிக் கத்தியது?'' என்று கோபத்தோடு



இரைத்தார். காவல் வீரர் தலைவனும் தன் வீரர்களிடம் ''கூச்சல் போடும் இந்தக் கூட்டத்தைக் கலைத்து விரட்டுங்கள்'' என்று கூறவே வீரர்களும் கூட்டத்தின் மீது பாய்ந்தார்கள். அதைக் கண்ட மன்னன் ஜிதகேது திருப்தி அடைந்தவனாய் ''இவர்களுக்கு அடி, உதை, வெட்டு, குத்து என்றால் தான் புரியும். இப்படி காவல் வீரர்கள் செய்தது மிகவும் சரியே'' என்றான் சிரித்துக் கொண்டே.

காவல்வீரர் தலைவன் காளிவர்மனைப் பார்த்து ''மன்னரின் கட்டளையைக் கேட்டாயா? வா வா. இனி தாமதிக்காதே'' என்றான். காளிவர்மனும் ''நல்ல மன்னன்! அவனுக்கு ஏற்ற மந்திரி!! படைத் தலைவர்கள் என்ற பெயரில் அடி ஆட்கள்! இதுவும் ஒரு ஆட்சியா?'' என்றான். அத்தலைவனும் ''நம் மன்னர் எப்போது எதைச் செய்வார் என்பது யாருக்கும் தெரியாது. நான் உன்னைக் கொலைக் களத்தில் கொண்டு போய்ச் சேர்ப்பதற்குள் மன்னர் உனக்கு விதித்த தண்டனையை ரத்து செய்தாலும் செய்து விடுவார். இதுபோல் பலபேர்கள் விஷயங்களில் நடந்திருக்கிறது. உன் அதிர்ஷ்டம் எப்படி இருக்கிறதோ'' என்றான் சற்று பரிதாபப்பட்டு.

காளிவர்மன் அப்படி நடந்து விடும் என்று எதிர்பார்க்கவில்லை. அந்த வீரர்களிடமிருந்து எப்படித் தப்பி ஓடுவது என்றே யோசிக்கலானான். அப்போது காவல் வீரர் தலைவன் ''காளிவர்மா! உன் கைகளில் விலங்கு மாட்டித்தான் கூட்டிச் செல்ல வேண்டும். நீட்டு கைகளை,'' என்று கூறியவாறே அவனருகே வந்தான். காளிவர்மனும் ''நானோ இன்னும் சற்று நேரத்தில் இறக்கப் போகிறவன். அதனால் நீ என்ன செய்தாலும் நான் கவலைப் படப் போவதே இல்லை.'' என்றான்.

அந்தத் தலைவனோ ''நீ சொல்வதைக் கேட்க நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் நீ மட்டும் தப்பி ஓட நினைத்தால் அது மட்டும் நடக்காது. உன்னைச் சுற்றிப் பதினைந்து வீரர்கள் இருக்கிறார்கள். அதனால் பைத்தியக்காரத்தனமாக அப்படி எதையாவது செய்யாதே. சரி நட கொலைக்களத்திற்கு'' என்றான். காளிவர்மனும் ''நான்தயார்'' என்று கூறவே அவனைச் சுற்றி வீரர்கள் வர, யாவரும் அங்கிருந்து கிளம்பி

னார்கள். சுமார் இரண்டு மணி நேரம் நடந்த பின் அவர்கள் மரங்களடர்ந்த ஒரு பகுதியை அடைந்தார்கள். அது மலைகள் சூழ்ந்த இடம். ஒரு மலையில் நீர் வீழ்ச்சி ஓவென்ற இரைச்சலைச் செய்து கொண்டு இருந்தது. மரங்களின் மத்தியில் போய்க் கொண்டிருந்தபோது காளி வர்மன் வீரர் தலைவனிடம் '' இங்கேயா என்னைத் தூக்கிலிடப் போகிறீர்கள்?'' என்று கேட்டான்.

அந்தத் தலைவன் ''இல்லை. இன்னமும் கொஞ்சதூரம் போக வேண்டும்.'' என்று கூறிக் கொண்டிருக்கும் போது ஒரு கொழுத்த காட்டெருமை மீது ஒரு கரிய உருவம் உட்கார்ந்து கொண்டு வருவதைக் கண்டான். அது தன் கைகால், உடல் எதுவுமே தென்படாதவாறு நீண்ட கருப்பு அங்கியை அணிந்திருந்தது. எல்லாவற்றையும் பார்க்க மட்டும் கண்களுள்ள இடத்தில் இரு ஓட்டை கள் இருந்தன.

அந்தக் கரிய உருவத்தின் கையில் ஒரு கோடாலி இருந்தது. அதை உயர்த்தியவாறே அது அந்த வீரர்களின் பக்கம் வந்து ''யார் நீங்கள்? உங்கள் தலைகளை என்னிடம் கொடுக்கவா வந்திருக் கிறீர்கள்?'' என்று கரகரத்த குரலில் உறுமியது. அந்த உருவம் அருகில் வந்ததும் வீரர்கள் ஏறி அமர்ந்திருந்த குதிரைகள் மிரண்டு மூலைக்கு ஒன்றாக ஓடின.

காளிவர்மன் திடீரென யாரோ மர்ம உருவம் வந்து காவல் வீரர்களின் பணியில் குறுக்கிடுவதைக் கண்டு ஆச்சரியப் பட்டான். அந்த உருவத்தைப் பற்றி அறிய விரும்பி அவன் சட்டெனத் தன் குதிரையில்



இருந்து குதிக்கவே கரிய உருவம் சட்டெனப் பாய்ந்து ''யார் நீ? இங்கே ஏன் வந்தாய்?'' என்று அதட்டிக் கேட்டது.

அதைக் கேட்ட காளிவர்மன் ''அது சரி கருப்புத் துணிக்குள் மறைந்திருக்கும் நீயார்? வழிப்பறிக் கொள்ளைக்காரனா அல்லது ராத்திருடனா?'' என்று கேட்டான். இதற்குள் காவல் வீரர்கள் தம் குதிரைகளோடு அங்கு வந்து விட்டார்கள். அப்போது அந்தக் கரிய உருவம் ''நான் யார் என்பது அறிந்திருக்கவில்லையா? நான் இங்கு கொலை செய்யக் கொண்டு வருபவர்களின் தலைகளை வெட்டி வீழ்த்துபவன். உன்னைக் கூட்டி வந்த இந்த காவல் வீரர் தலைவனின் தலையை வெட்டிக் காட்டுகிறேன்'' என்றான். அப்போது காவல் வீரர் தலைவன் தன் வாளை உருவிக் கொண்டு ''அடே! இந்த மாவீரனின் தலையை நீயா வெட்டப் போகிறாய்? அதற்கு நீ மறுபிறப்பு தான் எடுத்து வர வேண்டும். இப்போது உன் தலைதான் தரைமீது விழுந்து உருளப் போகிறது பார்'' என்று கூறியவாறே அந்த உருவத்தின் மீது பாய்ந்தான். அப்போது காளிவர்மன் கரிய உருவம் வைத்திருந்த கோடாலியைப் பிடுங்கி அதால் காவல் வீரர்தலைவனின் தலையை வெட்டி விட்டான்.

அவன் அவ்வாறு செய்ததற்குக் காரணம் தான் அரசாங்க வீரர்களிடமிருந்து தப்ப நல்ல வாய்ப்பு கிடைத்தது தான். அவன் கனக மன்னன் விதித்த தண்டனை அநியாயமானது என்று எண்ணிக் கோபமும் ஆத்திரமும் கொண்டிருந்தான். அதை இப்போது வெளிப் படுத்தி விட்டான்.

கரிய உருவம் திகைத்துப் போய் நின்றது. ஏனெனில் கண்மூடிக் கண் திறப்பதற்குள் அப்படி நடந்து விட்டது. தன் கோடாலியைப் பிடுங்கியவன் யார் என்று பார்க்கலானான். காளிவர்மன் கோடாலியுடன் இருப்பதைக் கண்டு மலைத்துப் போனான். அப்போது தொலைவிலிருந்து ''கரடியப்பரே வாழ்க! சபாஷ்'' என்ற குரல் ஒலித்தது.

(தொடரும்)



நவீன
வேதாளக்
கதை

# அறிஞரின் அறிவுரை

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைத் தூக்கிச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல் கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ இந்த பயங்கர நள்ளிரவில் விடா முயற்சி யுடன் ஏதோ ஒரு வேலையைச் செய்ய முயல்வதைப் பார்த் தால் யாரோ இதைச் செய்யும் படி உனக்கு அறிவுரை கூறி இருக்கிறார் என்றே நினைக்கி றேன். அரசர்களுக்கும் அவ்வப் போது ஆலோசனைகளை



அமைச்சர்கள் கூறி வருவார்கள். அவற்றில் சில ஏற்கத்தக்கனவாக இருக்கும். மற்றவை புறக்கணிக்கத் தக்கதாய் இருக்கும். எனவே அரசர்கள் அந்த அறிவுரைகள் ஏற்கத்தக்கனவா என்று சிந்தித்து செயல்பட வேண்டும். ஏனெனில் அரசன் சொல்வது தான் சட்டம். அதுபோல ஒரு கிராமத்தில் அதன் கிராம அதிகாரி கூறுவதே சட்டம். இது பற்றி விளக்க ஒரு கதையைச் சொல்கிறேன். கவனமாகக் கேள்'' என்று கதையை ஆரம்பித்தது.

தகடூர் என்ற கிராமத்தில் தங்கப்பன் தான் கிராம அதிகாரி. அவன் எந்த விஷயத்திலும் அந்த ஊரின் பண்டிதரும் அறிஞருமான நீலகண்டரின் அறிவுரைகேட்டு அதன்படி நடந்து வந்தான். நீலகண்டரும் யாராவது தவறு செய்தால் அதை ஏன் செய்தார் என்று நன்கு யோசித்து தக்க தண்டனை கொடுப்பதுப்பற்றி கிராம அதிகாரியிடம் கூறுவார். கிராம அதிகாரியும் அந்த அறிவுரைப்படி நடப்பான். அது போல ஊரில் ஒருவர் ஒரு நற்செயலைச் செய்தால் அதைப் பாராட்டிப் பரிசு அளிப்பதானால் அதனால் என்ன பயன்கள் விளையும் என அவர் யோசித்த பிறகே கிராம அதிகாரிக்கு அறிவுரை கூறுவார்.

அந்த ஊரில் முருகையயன் என்ற கிழவன் இருந்தான். அவன் திடீரென நோய்வாய்ப் பட்டு படுத்த படுக்கையாகக் கிடந்தான். அவன் சம்பாதித்துத் தான் தன் மகன் மருதனை வளர்த்து வந்தான். மருதன் சோம்பேறி. எந்த வேலையிலும் நாட்டம் கொள்ளாத இளைஞன். தன் தந்தையின் நிலை கண்டு அவன் சாப்பாட்டிற்காக வீடு வீடாகப் போய் பிச்சை எடுக்கலானான்.

அவன் நீலகண்டரின் வீட்டிற்குப் போய் பிச்சை கேட்டபோது அவர் ''நீ ஏன் ஏதாவது வேலை செய்து உன் தந்தைக்கு சாப்பாடு போடக்கூடாது? இவ்வளவு நாட்களாக அவன் வேலை செய்து உனக்குச்சாப்பாடு போட்டு வந்ததால் தானே நீ சோம்பேறியாக ஊரில் திரிந்து கொண்டு இருந்தாய்? பிச்சை எடுப்பது பெரும் குற்றம். நீயோ வேலை செய்யாமல் பிறர் உழைப்பால் கிடைப்பதைச் சாப்பிட விரும்புகிறாய். இது குற்றம். நீ முதல் தடவையாகச் செய்ததால் தண்டிக்காமல் விட்டு விடுகிறேன். ஆனால்

இன்னொரு முறை இதைச் செய்தால் கிராம அதிகாரியிடம் சொல்லி உன்னைச் சிறைக்குள் தள்ளுவேன்'' என்றார். அதைக் கேட்ட மருதன் பயந்து போய் ஊரை விட்டே ஓடி விட்டான்.

அதனால் அவனது தந்தை முருகை ய்யன் அநாதையாகி விட்டான். அப்போது நீலகண்டர் கிராம அதிகாரி யிடம் நடந்ததைக் கூறி'' கிராமத்தின் அநாதைகளையும் உடல் ஊனமுற்ற வர்களையும் பராமரிக்க வேண்டியது கிராம அதிகாரியின் கடமை. எனவே முருகைய்யனை இந்த கிராமத்தவர் முறைபோட்டுக் கொண்டு கவனித்து வரவேண்டும் என்று கட்டளை இடுங்கள்'' என்று யோசனை கூறினார் கிராம அதிகாரியும் அது சரியே எண்ணி அவ்வாறு கட்ட ளையும் பிறப்பித்தான்.

அந்த ஊரில் காலன், மாலன், வேலன் என்ற மூன்று இளைஞர்கள் இருந்தார்கள். அவர்கள் போக்கிரிகள் அவர்கள் கிராம அதிகாரியிடம் ''எங்களுக்கு வேலை கொடுங்கள். அப்போது தான் எங்கள் பெற்றோர் களைக் காப்பாற்ற முடியும். வேலை கொடுக்கவிட்டால் நாங்கள் ஊரை விட்டே போய் விடுவோம். அப் போது எங்கள் பெற்றோரை பராமரிக்கும் பொறுப்பு உங்கள் மீது தான்விழும்'' என்றார்கள்.

இதே சமயம் அவர்கள் சொன் னதைக் கேட்டுக் கொண்டே வந்த நீலகண்டர் ''இவர்களை ஊரிலிருந்து



போய்விட அனுமதித்து விடு. இவர் களது பெற்றோர்களை கவனித்துக் கொள்ள ஏற்பாடு செய்வோம்'' என்றார். அதைக் கேட்டு அந்த மூன்று போக்கிரிகளும் சிரித்துக் கொண்டே அந்த ஊரிலிருந்து வெளியேறி னார்கள். நீலகண்டரும் கிராம அதிகாரியிடம். ''கவலைப் படாதீர் கள். இவர்கள் மட்டும் அல்ல. மருதனும் விரைவில் திரும்பி வந்து தம் பெற்றோர்களை கவனித்துக் கொள்ளத்தான் போகிறான்'' என்றார். இதற்குப் பிறகு யாரும் வந்து கிராம அதிகாரியிடம் எவ்விதப் புகாரும் செய்யவில்லை.

சில நாட்களுக்குப் பிறகு தகடூர் கிராம அதிகாரி தங்கப்பனுக்கு காலனும் மாலனும், வேலனும் மருதனும் கோட்டூரில் வேலை செய்து பணம் சம்பாதித்து வருகி



றார்கள் என்று தெரிந்தது. ஆனால் அவர்கள் தங்கப்பனைப் பற்றி அவதூறாகப் பேசித் தூற்றி வருகிறார் களாம். அவர்கள் என்ன வேலை செய்கிறார்கள்ள என்று பார்க்க தங்கப்பன் ஆவல் கொண்டான். தங்கப்பன் தன் வண்டிக்காரன் வரதனிடம் ''வரதா! நம் வில் வண்டியைக் கட்டிக் கொண்டுவா. நாம் கோட்டூர் போகலாம்'' என்றான். வரதனும் வண்டியைப் பூட்டிக் கொண்டு வந்து நிறுத்தவே தங்கப்பன் அதில் ஏறி உட்கார்ந்தான். வரதன் வண்டியை ஓட்டிக் கொண்டு சென்றான்.

கோட்டூர் தகடூரிலிருந்து ஐம்பது மைல் தூரத்தில் இருந்தது. போகும் பாதையோ கரடு முரடானது. அதில் வேகமாகப் போய்க் கொண்டிருந்த வில்வண்டி ஒரு பாறாங்கல்லின் மீது ஏறி குடை சாய்ந்தது. தங்கப்பன் வண்டியில் இருந்து விழவே அவனது தலையில் பலத்த அடி பட்டது. அவன் நினைவை இழந்து விழுந்து கிடந்தான். வண்டிக்கார வரதனும் வண்டியிலிருந்து விழவே அவனது கையில் பலத்த காயம் ஏற்பட்டது. அச்சமயத்தில் காலன் அவ்வழியே வந்து கொண்டிருந்தான்.

அவன் குடை சாய்ந்த வண்டி யையும் அதன் பக்கம் நின்ற எருதையும் கண்டான். கீழே நினைவு இழந்து விழுந்து கிடந்த தங்கப் பனையும் காயம் அடைந்து துடிக்கும் வரதனையும் பார்த்தான். உடனே வண்டியைச் சரியாக நிறுத்தி அதில் எருதைப் பூட்டி தங்கப்பனையும் வரதனையும் வண்டியில் ஏற்றினான். பிறகு அவன் அருகிலுள்ள பழுதூரு க்குப் போய் அங்கு ஒரு வைத்தி யரிடம் சிகிச்சைக்குக் கொண்டு சென்றான்.

வண்டிக்காரன் வரதனின் காயம் இரண்டே நாட்களில் ஆறிவிட்டது. ஆனால் தங்கப்பன் நினைவை அடைந்து குணம் அடைய ஒரு வார காலம் பிடித்தது. தங்கப்பன் பணக் காரன் என்று அறிந்த வைத்தியரும் அவர்கள் குணம் அடைந்ததும் அவர்களிடமிருந்து பணம் வாங்கிக் கொள்வதாகக் காலனிடம் சொல்லி விட்டே சிகிச்சை அளித்தார். காலனும் அவர்கள் இருவரும் முழுவதுமாக குணம் அடையும் வரை அவர்களோடு இருந்து அவர்களுக்கு

வேண்டிய வேலைகளைச் செய்தான். வரதன் குணம் அடைந்ததுமே வண்டியை ஓட்டிக் கொண்டு தகடூருக்குப் போய் தங்கப்பன் பழுதூரில் இருப்பதாயும் விபத்து நடந்ததையும் கூறினான். உடனே தங்கப்பனின் மனைவியும் மக்களும் உறவினர்களும் நீலகண்டரும் மற்றும் பலரும் உடனே கிளம்பி பழுதூருக்குப் போய் தங்கப்பனை பார்த்து நலம் விசாரித்தார்கள்.

அப்போது காலன் ''நான் செய்தது தவறே. என் போலத்தான் மாலனும் வேலனும், மருதனும் தவறு செய்தவர்கள். நாங்கள் திருந்த வாய்ப்பை அளிக்க வேண்டும் என்று கடவுளை தினமும் வேண்டி வருகிறோம். முதன் முதலாக அவர் எனக்கு வாய்ப்பு அளித்து இவருக்குப் பணி புரியும்படி செய்து என்னைத் திருத்தி விட்டார்'' என்று களிப்புடன் கூறினான்.

தங்கப்பன் வைத்தியருக்கு நிறையப் பணத்தைக் கொடுத்தான். அதன் பின் தகடூருக்கு வந்தான். அவன் நீலகண்டரிடம் ''காலன் தன் தவறை உணர்ந்து விட்டான். அவன் விபத்தில் அடிபட்டு விழுந்து கிடந்த என்னையும் வரதனையும் கண்டு இரக்கப் பட்டதோடு எங்களை ஒரு வைத்தியரிடம் அழைத்துச் சென்று சிகிச்சைக்கும் ஏற்பாடு செய்தான். நாங்கள் குணம் அடையும் வரை எங்களோடு இருந்து எங்கள் தேவைகளையும் கவனித்துக் கொண்டான்.



இப்படி எல்லாம் அவன் நற்செயல்களைச் செய்ததால் அவன் திருந்திவிட்டான். எனவே அவனை நம் ஊருக்கு வரச் சொல்லி ஒரு வேலையும் போட்டுக் கொடுக்கலாம் என்று நினைக்கிறேன். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

நீலகண்டரும் ''நீங்கள் காலன் விஷயமாக என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள். அது உங்கள் இஷ்டம். இனிமேல் நீங்கள் இந்த ஊரிலிருந்து வண்டியில் வேறு எந்த ஊருக்கும் போகக் கூடாது. போக்கிரிகள் இன்னும் மூன்று பேர்கள் இருக்கிறார்கள். அவர்களும் காலனைப் போலக் கடவுளிடம் வேண்டிக்கொண்டு தான் இருக்கிறார்கள். காலன் திருந்திவிட்டான் என உறுதியாகக் கூறவிட முடியாது. அன்று ஏதோ அவனுக்கு அவ்வாறு

செய்ய வேண்டும் என்று தோன்றிய தால் அவ்வாறு செய்தான். இந்த ஒரு நிகழ்ச்சியைக் கொண்டு அவன் திருந்தி விட்டான் என்ற முடிவுக்கு வந்து விடக் கூடாது. காலன் விஷயம் காக்கை உட்காரப்பனம் பழம் விழுந்த கதை போலத்தான்'' என்றார்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''நீலகண்டர் அறிவாளியாக இருந் தாலும் தயை, கனிவு, தாட்சணியம் ஆகிய இயல்புகள் கொள்ளாதவர் போலத் தோன்றுகிறதே.

காலன் சமயத்தில் செய்த உதவியால் தானே கிராம அதிகாரி தங்கப்பன் உயிர் பிழைத்தான்? அப்படிப்பட்ட காலன் பால் அவர் ஏன் இரக்கம் காட்டாமல் இருந்தார்? இதற்குச் சரியான விடை தெரிந்ததும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது. விக்கிரமனும் ''மனிதன் மிருகங்களை விட உயர்ந்தவன் என்பதற்கு அவன் அறிவு படைத் தவன் என்பதே முக்கிய காரணம். அந்த அறிவை இடம், பொருள், காலத்திற்கு ஏற்ப சரியாக அவன் பயன்படுத்த வேண்டும். காலன் தன் பிரார்த்தனையாலே தக்க வாய்ப்பை பெற்று தான் நற்செயலைச் செய்து திருந்தி விட்டதாக எண்ணி விட்டான். இது தற்செயலாக நேர்ந்தது. காலனுக்கு வேலை கொடுத்தால் மற்ற மூவரும் யாரோ ஒருவருக்கு உதவி விட்டுத்தாம் திருந்தி விட்டதாகக் கூறி கிராம அதிகாரியிடம் வேலை கேட்பார்கள். இது அவர்களை ஊக்குவிப்பது போலாகி விடும். எனவே காலனின் ஒரு செயலைக் கொண்டே அவன் திருந்தி விட்டான் என எண்ணுவது தவறு. இதனால் தான் நீலகண்டர் காலனுக்கு கிராம அதிகாரி வேலை கொடுப்பதை விரும்பவில்லை'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிவிட்டது.








## கடல் வழிபாடு

நம் நாட்டில் மேற்குக் கடற்கரையில் வாழும் மீனவர்கள் ஜனவரியில் மகரசங்கராந்தியின் போது கடலை வணங்கி வழிபடுகிறார்கள். பரந்த கிடக்கும் கடல் நீரை இவர்கள் பக்தி சிரத்தையுடன் அன்ன பூர்ணேஸ்வரி எனத் துதிக்கிறார்கள். இந்த வழிபாடுகள் மீனவர்களை ஒன்று சேர்க்கிறது. தங்கள் தொழிலுக்கு அடிப்படையாக உள்ள கடலை தெய்வமாகக் கருதி வழிபடுகிறார்கள்.

குஜராத் மாநிலத்தில் மகர சங்கராந்தி உத்தராயனமாகக் கொண்டாடப் படுகிறது. அன்று மக்கள் மிக்க மகிழ்ச்சியுடன் பட்டங்களைப் பறக்க விடுகிறார்கள். பட்டங்கள் பல வண்ணங்களில் வானத்தில் பறப்பது கண் கொள்ளாக் காட்சியாகும்.

## மலைக்குகைகள் பழங்காலப் பெருமை!

மத்தியப் பிரதேசத்தில் பீம்பேட்காமலைக்குகைகள் யுனெஸ்கோவின் பழங்காலப் பெருமை பெற்ற இடங்களின் பட்டியலில் சேர்க்கப் பட்டுள்ளன. இந்தக் குகைகளில் 5000 ஆண்டுகளுக்கு முன் வரையப் பட்ட வண்ண ஓவியங்கள் உள்ளன. இந்த குகைகள் இருப்பதை போபாலின் விக்கிரம் பல் கலைக் கழகப் பேராசிரியர் டபிள்யுவாக்கன்கர் 50 ஆண்டுகளுக்கு முன் கண்டு பிடித்தார். இவை 580 சிறு குகைகள். இவற்றிலுள்ள ஓவியங்கள் மகாபாரதக் கதைகளைச் சித்தரிக்கின்றன. இந்தப் பகுதி மகாபாரதத்தின் பீமனின் பெயரால் அழைக்கப் படுகிறது.



இந்தியப் புராதனக் கதைகள் - 21

# கைத்தடியால் கைவிட்டான்!



வனாச்சாரியார் என்ற மகரிஷியின் சீடர்கள் ராமும், பிரகாஷும் ஆவர். இருவரும் சிறந்த மாணவர்களாக விளங்கினார்கள். அவர்கள் வேதங் களையும் உபநிஷத்துக்களையும் நன்கு கற்று பல சித்திகளையும் பெற்றார்கள்.

மகரிஷியின் ஆசிரமம் சரயுநதிக் கரையில் இருந்தது. அவரது குரு இமயமலைப் பள்ளத்தாக்கு ஒன்றில் வாழ்ந்து வந்தார். ஒருநாள் ஒருவர் வந்து வனாச்சாரியாரிடம்'' தங்கள் குரு தங்களை உடனே இமய மலைக்கு வரச் சொன்னார்'' என்று தகவல் கொடுத்தார். உடனே தம் மாணவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு அவர் இமய மலைக்குப் போய்விட்டார். தம் குருவிடம் இரு சீடர்களும் அவர் எப்போது திரும்பி வருவார் என்று கேட்டபோது அவர் அது பற்றித் தம்மால் எதுவும் கூற முடியாது என்று கூறி விட்டுப் போனார். அவரை அந்த இரு சீடர்களும் மற்றவர்களும் வழி அனுப்பி வைத்தார்கள்.

ராம் ஆசிரமத்திலேயே இருந்தான். பிரகாஷ் தன் ஊருக்குப் போய் சன்னியாசவாழ்வே வாழ்ந்து வ்நதான் அவன் பாபா பிரகாஷ் என்று புகழ் பெற்றான். அவனுக்குப் பல சீடர்களும் ஏற்பட்டனர். ஆயினும் அவன் குடிசையில் வாழ்ந்து எளிய வாழ்க்கை வாழ்ந்து வந்தான். அவனது பொருள்கள் ஒரு கைத்தடி, ஒரு வெண்கலச் சொம்பு, ஓரிரு துணிகள். ஆனால் ராம் பாபா எனப் பெயர்

பெற்று ஆடம்பர வாழ்வு வாழ்கிறான் என்று கேட்டு அவன் மனம் வருந்தினான்.

ராமுடைய பணக்கார சீடன் ஒருவன் அவனுக்கு ஒரு மாளிகை கட்டிக் கொடுத்துப் பல வேலைக்காரர்களை நியமித்தான். அவனுக்கு தினமும் அறுசுவை உண்டி அளித்து வந்தான்.

இதையெல்லாம் கேட்ட பிரகாஷ் ''ராம் தான் எப்படித் தாழ்ந்து போய்விட்டான்! சன்னியாசிக்கு இம்மாதிரியான ஆடம்பர வாழ்வு கூடாது என நானே போய்ச் சொல்லி அவனைத் திருத்துகிறேன்'' என்று எண்ணினான். அதனால் ஒருநாள் அவன் ராமின் ஆசிரமத்திற்குச் சென்றான். அங்கு சென்றதும் ராம் ஆடம்பர வாழ்வு வாழ்ந்து வருவதை நேரில் கண்டான். அவன் ராமிடம் யாரும் இல்லாத வேளையில் ''நண்பா! இக லோக சுகங்களில் நீ இப்படி மூழ்கிக் கிடப்பது சரியா? இப்படிச் செய்வதால் உன் குறிக்கோளே போய்விடுமே. என்னுடன் வந்து என் குடிசையில் வாழ். இதை எல்லாம் விட்டுவிட்டு புதிய வாழ்வை நீ ஆரம்பி'' என்று கூறினான்.

அப்போது ராம் ''இதெல்லாம் என் செயல் அல்ல. ஆண்டவனாக எனக்கு அளித்தது. அவன் செயலை யாரால் தடுத்து நிறுத்த முடியும்?'' என்றான். அப்போது அவ்விருவரின் நண்பன் ஒருவன் ஓடி வந்து ''நண்பர்களே! நம் குரு வனாச்சாரியார் அக்கரையில் வந்து நின்று உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார். அவர் கொஞ்ச நேரம் தான் அங்கே இருப்பாராம். அவர் உங்கள் இருவரையும் தம்மோடு இமயமலைக்கு அழைத்துக் கொண்டு போக விரும்புகிறார்''



என்றான். அப்போது பிரகாஷ் ''ஆகா! என்பாக்கியமே பாக்கியம். சரியாக இந்த சமயத்தில் நான் இங்கே வந்தேனே. ஆனால் என் சீடர்களுக்கு நான் இமயமலைக்குப்போவதை எப்படித் தெரிவிப்பது?'' என்று கூறித் தவிக்கலானான். பாபா ராமோ ''அது பற்றி நீ ஏன் கவலைப் படுகிறாய்? எல்லாம் நம் குருவே தீர்மானிப்பார்'' என்றான். பாபா ராம் தான் போவது பற்றி யாருக்கும் தெரிவிக்கவில்லை. இரு சீடர்களும் சரயுநதிக்கரையை அடைந்தார்கள். எதிர்க் கரையில் உள்ள குருவைக் காண அவர்கள் படகில் தான் செல்ல முடியும்.

அப்போது பாபா பிரகாஷ் ஏதோ நினைவிற்கு வந்தது போல ராமிடம் ''நண்பா! என் கைத்தடியை உன் அறையில் வைத்து விட்டு வந்து விட்டேன். நான் போய் அதை எடுத்து வருகிறேன். நீ இந்தப் படகில் எதிர்க்கரைக்குப் போ. நான் என் கைத்தடியை எடுத்துக் கொண்டு வந்து அடுத்து வரும் படகில் ஏறி அங்கு வந்து சேர்கிறேன்'' என்று கூறி விட்டு பாபா ராமின் உறைவிடத்திற்குச் சென்றான். பாபாராம் படகில் ஏறி எதிர்க் கரைக்குச் சென்றான். பிரகாஷ் பாபா தன்கைத்தடியை எடுத்துக் கொண்டு படகுத் துறைக்கு வந்தான்.

ஆனால் அப்போது நதியில் வெள்ளம் வந்ததால் எதிர்கரைக்குச் சென்ற படகு திரும்பி வரவில்லை. வேறு படகும் இல்லை. அதனால் வெள்ளம் வடிந்த பிறகு தான் பாபா பிரகாஷ் எதிர்க்கரைக்கு செல்ல முடியும். ஆனால் அது உடனே நடக்கவில்லை.

பாபாபிரகாஷ் மனம் தளர்ந்து போய் அங்கேயே உட்கார்ந்து விட்டான். அவனது கண்களில் கண்ணீர் நிறைந்தது. ஒருகைத் தடிக் காக ஆசைப் பட்ட தான் பாபா ராமிடம் ஆசாபாசங்களை விடச் சொல்லி அறிவுரை கூறியது அறிவற்ற செயல் என பாபா பிரகாஷ் உணர்ந் தான். ராம் எல்லாம் கடவுளின் சித்தம் என நம்பினான். ஆனால் பிரகாஷ் ஆசைக்கு அடிமையாகி தன் குருவுடன் இமயமலைக்குச் செல் லும் வாய்ப்பைத் தவற விட்டு விட்டான்!



# செய்தி சுடர்

## சிங்கப்புலிக்குட்டி




இந்த சிங்கப்புலிக்குட்டி பிறந்து 180 நாட்களுக்கு மேலாகியும் இறக்கவில்லை. சாதாரண இம்மாதிரிக் கலப்புப் பிறவிகள் வெகு நாட்கள் உயிர் வாழ்ந்தது இல்லை. சிங்கத்திற்கும் புலிக்கும் பிறந்த இந்த சிங்கப் புலிக்குட்டி சீனாவில் ஹானானிலுள்ள சாங்கஷா மிருகங்கள் பூங்காவில் உள்ளது. இந்த ஆண்டு மார்ச் 27ல் பிறந்த இது இன்னமும் உயிரோடு இருப்பதைக் கண்டு எல்லோரும் ஆச்சரியப் படுகிறார்கள். இந்தப் பூங்காவின் அதிகாரிகள் இந்த சிங்கப்புலிக்குட்டி இன்னமும் வளர்ந்து பெரிதாகும் என்றே எதிர்ப்பார்கிகறார்கள்.

## மணலில் சிற்பக் கலை!

பெர்லினில் மணலில் சிற்பக்கலைப் போட்டி அண்மையில் நடந்தபோது அதில் கலந்து கொள்ள இந்தியாவிலிருந்து சென்ற ஒரே சிற்பி ஒரிஸ்ஸாவின் சுதர்சன பட்நாயக் என்பவரே. இப்போட்டியில் இவரைத்தவிர 19 சிற்பிகள் வேறு பலநாடுகளிலிருந்து வந்து கலந்து கொண்டார்கள். இப்போட்டியில் முதல் பரிசை ரஷ்யாவும் இரண்டாவது பரிசை நெதர்லாண்டும் தட்டிச் சென்றன. பட்நாயக் மணலில் விநாயகர் உருவத்தைச் செதுக்கி மூன்றாவது பரிசைப் பெற்றார். பட்நாயக்கின் வயது 26. இவர் இந்தக்கலையைப் பயில்விக்க ஒரு பள்ளியை நிறுவியுள்ளார். அதில் ஏறக்குறைய 50 மாணவர்கள் பயில்கிறார்கள்.



# நிழலே சாட்சி!

சிறைச்சாலை அதிகாரி ஒருநாள் மாலையில் கைதி ஜோ எர்ட்மனைக் காண வந்தார். கைதி தனி அறையில் அடைக்கப்பட்டிருந்தான். அவன் ஒரு அரசியல் பிரமுகரைக் கொன்றதாகக் குற்றம் சாட்டப் பட்டிருந்தான். அதிகாரி அவனைக் காண ஒருவர் வந்திருப்பதாக அவனிடம் தெரிவித் தார். கைதியும் தன்னைப் பார்க்க யார் வந்திருக்கிறார் என்று காண ஆவலு டன் சென்றான்.

வந்தவர் கைதியிடம் ''நான் ஜான் வாட்சன் என்ற வழக்கறிஞர். உன் வழக்கை நான் பணமே வாங்காமல் எடுத்து நடத்துகிறேன்'' என்றார். அந்த உயரமான நாற்பது வயதான மனிதரை வியப்புடன் பார்த்த அவன் ''ஐயா! இது வீண்முயற்சி உண்மை யில் அந்த அரசியல்வாதியை வெறுக்கத் தான் செய்தேன். அவன் இறப்பதற்கு முன் அவனோடு தகராறு செய்தேன். ஆனால் நான் அவனைக் கொல்லவில்லை. கொலை நடந்த போது நான் அந்த இடத்தில் இருக்க வில்லை என்று நிரூபிக்க எனக்கு சாட்சி இல்லை. மேலும் நான் அதே சமயத்தில் வேறு இடத்தில் இருந் தேன் என்று கூறவும் யாரும் இல்லை. பணம் இல்லை, நண்பர்கள் இல்லை சாட்சிகளும் இல்லை. நான் எப்படி வழக்கில் வெற்றி பெற முடியும்?'' என்று கேட்டான்.



வாட்சனும் ''கவலைப் படாதே. நீதான் இந்தக் குற்றத் தைச் செய்தாய் என்பதற்குப் போதிய சாட்சியங்கள் இல்லை. அதனால் உனக்கு வழக்கில் சாதகமான தீர்ப்பு கிடைக்கும். உனக்காக வழக்கில் நான் ஆஜராகிறேன்'' என்று கூறி விட்டுச் சென்றார்.

வாட்சன் அந்த வழக்கு பற்றி அன்று காலைதான் செய்தித் தாளில் படித்தார்.

வில்லிபானிஸ்டர் மத்தியானம் 2.25 மணிக்கு தன் வீட்டிற்குத் திரும்பி வந்தார். அப்போது தன் வீட்டு முன் வாசலில் ஒரு தோல்பை கிடப்பதையும் அது வீட்டின் வாசல் கதவின் நாதாங்கியுடன் ஒரு வெள்ளை நூலால் இணைக்கப்பட்டிருப்பதைக் கண்டார். உடனே அவர் அது பற்றிக் காவலதிகாரிக்குத் தெரிவிக்கவே அவரும் துப்பறியும் நிபுணர்களுடன் வந்து கீழே கிடந்த பையைத் திறந்து பார்த்தார். அதில் ஒரு கைத்துப்பாக்கியும் எளிதில் வெடிக்கும் குச்சிகளும் இருந்தன. வெள்ளை நூல் துப்பாக்கியின் குதிரையோடுக் கட்டப்பட்டிருந்தது.

காலையில் இதனைப் படித்த வாட்சன் மதியத்துள் கொலையாளி கைது செய்யப்பட்டு விட்டான் எனக் கேட்டதும் அது ஜோடிக்கப்பட்ட வழக்கு என நம்பினார். அதனால் ஒரு குற்றமற்றவனைக் காக்க வேண்டும் என்றே சிறைச்சாலைக்குச் சென்று ஜோவைக்கண்டார்.

நீதிமன்றத்தில் வழக்கு ஆரம்பமாகியது முதல் ஏழு சாட்சிகள் மே 22 மதியம் 2.25 மணிக்கு ஜோ எர்ட்மனை பானிஸ்டர் வீட்டருகே பார்த்ததாக நீதிபதியிடம் கூறினார்கள். அடுத்து வெண்ணிற ஆடைகள் அணிந்த இரு பெண்கள் முக்கிய சாட்சிகளாக வந்தனர். அந்த இருவரும், மற்றும் ஏழு சாட்சிகளும் அதே சமயத்தில் ஜோவை பார்த்ததாகவே கூறினார்கள்.



அந்த இருபெண்களும் தாம் அந்த ஞாயிறன்று மதியம் 1.50 மணிக்கு மாதா கோவிலிலிருந்து தம் வீட்டிற்கு பானிஸ்டர் வீட்டைக் கடந்து சென்றதாயும் அவர்கள் ஜோ அந்த வீட்டின் அருகே ஒரு சந்தில் நின்று கொண்டிருந்ததையும் பார்த்ததாக சாட்சியம் அளித்தார்கள். அவன் கட்டம் போட்ட சட்டையை அணிந்திருந்ததாயும் சற்று உந்தி உந்தி நடந்தாயும் அவர்கள் தெளிவாக உறுதிபடக் கூறினார்கள்.

கைதிக் கூண்டில் ஜோ கட்டம் போட்ட சட்டையை அணிந்து கொண்டு தான் நின்று கொண்டிருந்தான். நீதிபதி அவனை நடந்து காட்டச் சொன்னபோது அவன் உந்தி உந்தியே நடந்தான். இதனால் அவன் தான் குற்றவாளி என உறுதியாக்கப் பட்டது. ஆனால் வாட்சன் மனம்



தளர்ந்து விடவில்லை. அவர் அந்த இரு பெண்களிடமும் குறுக்கு விசாரணை செய்யலானார்.

''நீங்கள் மாதா கோவிலிலிருந்து வெளியே வந்ததும் என்ன செய்தீர்கள்?''

''உடனே நாங்கள் அங்கே ஒரு புகைப்படம் எடுத்துக் காண்போம்''

''அதை யார் எடுத்தார்கள்?'' உங்களிடம் அப்புகைப் படம் உள்ளதா?''

''ஓ! இருக்கிறது'' என ஒரு பெண் கூறித் தன் பையிலிருந்து ஒரு புகைப் படத்தை எடுத்து வாட்சனிடம் கொடுத்தாள். அப்போது நீதிபதி வழக்கை உணவு இடைவேளைக்குப் பிறகு தொடர்ந்து கேட்பதாகக் கூறி ஒத்தி வைத்தார்.

வாட்சன் புகைப் படத்தை எடுத்துக் கொண்டு வெளியே போய் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து அதை உன்னிப்பாகப் பார்த்தார். அதில் மாதாகோவிலின் முன் இரு பெண்களும் வெண்ணிற ஆடைகளில் நின்று கொண்டிருப்பதையும் மாதா கோவிலின் மேலுள்ள மணிக் கூண்டையும் கண்டார். படத்தில் மணிக்கூண்டின் நிழல் நீண்டு சாய்ந்து விழுந்திருப்பதைக் கண்டு அவர் மூளை மின்னல் வேகத்தில் செயல் பட்டது. உணவு வேளைக்குப் பின் நீதிமன்றம் கூடியதும் வாட்சன் தான் ஒரு முக்கிய சாட்சியைக் கொண்டு வரப் போவதாவும் அதனால் வழக்கை மறு நாளைக்குத் தள்ளிப் போடும்படியும் நீதிபதியிடம் வேண்டவே, அவரும் அதை ஏற்று வழக்கை மறு நாளைக்குத் தள்ளிப் போட்டார்.

மறுநாள் காலையில் நீதி மன்றத்தில் வாட்சன் கொண்டு வந்து நிறுத்தும் சாட்சியைக் காணவும் அவர் அளிக்கும் சாட்சியத்தைக் கேட்கவும் மக்கள் திரளாகக் கூடினர். மன்றத்தில் நீதிபதி வந்து இருக்கையில் அமர்ந்ததும் வாட்சன் தமது சாட்சியைக் சாட்சிக் கூண்டில் நிற்க வேண்டினார். வாட்சன் தமது கேள்விகளை அவரிடம் கேட்கலானார். ''தாங்கள் பல்கலைக்கழகத்தில் வானவியல் துறையின் தலைமைப் பேராசிரியர்தாமே?''

''ஆம். நான் அத்துறையின் தலைமைப் பேராசிரியர் தான்.''

''நான் ஒரு புகைப்படத்தைத் தங்களிடம் காட்டுகிறேன். அது ஒரு நாளில் எப்போது எடுக்கப்பட்டது என்று தங்களால் கூற முடியுமா?''

''ஓ! முடியுமே. அது என்று எந்த வேளையில் எத்தனை மணிக்கு எடுக்கப்பட்டது என்று கூறமுடியும். புகைப்படத்தைக் கொடுங்கள்.''

வாட்சனும் சாட்சிகளான பெண்கள் முன் தினம் தம்மிடம் கொடுத்த புகைப்படத்தைப் பேராசிரியரிடம் கொடுத்தார். அவர் அதை ஒரு நிமிடத்திற்குப் பார்த்துவிட்டு ''இது இந்த வருடம் மே மாதம் 22 பிற்பகல் 3.10 மணிக்கு எடுக்கப்பட்டது'' என்றார் வாட்சனும் ''இதை எப்படி அறுதியிட்டுக் கூறுகிறீர்கள்?'' என்று கேட்கவே அவரும் ''இதிலுள்ள தேவாலய மணிக் கூண்டின் நிழல் தரைமீது விழுந்ததைக் கொண்டு தான் சொல்கிறேன். நிழலின் நீளம், கோணம், திசை ஆகியவற்றைக் கொண்டு கணக்கிட்டு இதைக் கூறினேன்'' என்றார்.

வானவியல் பேராசிரியரின் சாட்சியம் ஏற்கப்பட்டது. முந்தைய ஏழு சாட்சிகளும் இரு பெண்களும் சாட்சிக் கூண்டில் மீண்டும் ஏற்றப்பட்டு வாட்சனால் குறுக்கு விசாரணை செய்யப்பட்டனர். அவர்கள் பானிஸ்டர் வீட்டை மே 22 பிற்பகலில் எத்தனை மணிக்குக் கடந்து சென்றார்கள் என்பதைச் சரியாகச் சொல்ல முடியாமல் குழம்பினார்கள். பேராசிரியரின் சாட்சியத்தையும் மற்ற சாட்சிகளின் குழப்பத்தையும் நீதிபதி குறிப்பிட்டு வழக்கைத் தள்ளுபடி செய்தார். ஜோ எரிட்மன் விடுதலையானான்.

பலருக்கு நிழல் பற்றி பேராசிரியர் கூறியது நம்பத்தகாததாக இருந்தது. அவர்கள் அடுத்த ஆண்டு மே 22 பிற்பகல் 3.10 மணிக்கு தேவாலயத்திற்குப் போய் மணிக் கூண்டின் நிழல் தரையில் விழுந்திருப்பதைப் பார்த்து அது முற்றிலும் சென்ற ஆண்டு எடுத்த புகைப்படத்தில் இருப்பது போலவே உள்ளதைக் கண்டு ஆச்சரியமும் திருப்தியும் அடைந்தார்கள்.



## வங்க மாநில நாட்டுப் புறக் கதை

# ஆற்றில் கிடைத்த மூவர்

**வெ**கு நாட்களுக்கு முன் ஒரு மன்னன் தன் குடி மக்களைப் பேணி நன்கு ஆட்சி புரிந்து வந்தான். மக்களின் குறை நிறைகளைப் பற்றி அமைச்சர்கள் வாயிலாகவும் ஒற்றர் கள் வாயிலாகவும் அவன் அறிந்து கொண்டான். ஆயினும் மன்னன் மாறு வேடத்தில் நாட்டின் பல பகுதிகளுக்குப் போய் மக்களை நேரில் கண்டும் அவர்களுடன் பேசியும் அவர்கள் பேசிக் கொள் வதைக் கேட்டும் நிலைமையை அறிந்து வந்தான்.

ஒரு நள்ளிரவில் மன்னன் மாறு வேடத்தில் ஒரு அரசாங்க அதிகாரி யின் வீட்டின் பக்கமாகச் சென்று கொண்டிருந்தான். அங்கு பெண் குரல்களைக் கேட்டு அவன் நின்று அவ்வீட்டு சன்னல் வழியாகப் பார்த்தான். மூன்று பெண்கள் தாம் எப்படிப் பட்டவரை மணக்க விரும்புவதாகக் கூறிக் கொண்டிருப் பதை அவன் கேட்டான்.



ஒருத்தி ''எனக்கு சுவையான உணவு பிடிக்கும். அதனால் அரண்மனை சமையல் காரரை மணக்க விரும்புகிறேன். அவர் மன்னனுக்கும் அரசிக்கும் தயாரி க்கும் உணவை எனக்கும் கொடுப் பாரே'' என்றாள். மற்றொருத்தி ''நான் ஒரு அமைச்சரை மணந்து கொண்டு நாடு முழுவதும் அவருடன் போய்ப் பார்ப்பேன். புதுப்புது இடங்களைக் காணவே நான் ஆசைப் படுகிறேன்'' என்றாள்.

அவனது மூன்றாவது பெண்ணோ ''என்னை ஒரு மன்னர் மணந்து கொண்டால் அவருக்கு அழகிய குழந்தைகளைப் பெற்றுத் தருவேன்'' என்றாள். அதைக்கேட்ட மற்ற இரு பெண்களும் பலமாகச் சிரித்தார்கள். அவர்கள் மூவரும் சகோதரிகள் என்பதை மன்னன் அறிந்து கொண்டு அங்கிருந்து தன் அரண்மனைக்குச் சென்றான்.



அந்த மன்னனுக்கு இரு மனைவிகள் இருந்தும் குழந்தை எதுவும் பிறக்கவில்லை. அதனால் அவன் தான் அதிகாரியின் வீட்டில் பார்த்த மூன்றாவது பெண்ணை மணந்து கொள்ள எண்ணினான். மறு நாள் காலையில் மன்னன் அந்த அரசாங்க அதிகாரியை அழைத்து ''நேற்றிரவு உன் பெண்கள் மூவரும் தம் திருமணம் பற்றிப் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டேன். ஒருத்தி என் சமையல் காரனை மணக்க விரும்புகிறாள். மற்றவள் ஒரு அமைச்சரையும் மூன்றாமவள் என்னையும் மணக்க விரும்புகிறாள். அவர்களது விருப்பப்படியே நீ மூன்று திருமணங்களையும் நடத்துகிறாயா?'' என்று கேட்டான்.

அந்த அதிகாரியும் அதைக் கேட்டு மகிழ்ந்து போய் ''ஆகா! தாராளமாகச் செய்து விடலாம்'' என்றான். மன்னனே மூன்று திருமணங்கள் நடக்க விமரிசையாக ஏற்பாடுகளைச் செய்ய அவை இனிது நடந்தேறின. மூத்தவள் அரண்மனைச் சமையல் காரனையும் இரண்டாவது பெண் அமைச்சரையும் மூன்றாவது பெண் மன்னனையும் மணந்து கொண்டார்கள்.

தம் தங்கைக்கு ராஜபோக வாழ்வு கிடைத்து விட்டதே என இரு சகோதரிகளும் மிகவும் பொறாமைப் பட்டார்கள். ஆனால் ராணியான தங்கையோ தன் இரு தமக்கைகளிடம் அன்பு காட்டியே வந்தாள். இளைய ராணி விரைவில் கர்ப்பமுற்றாள். தனக்கு உதவத் தன் தமக்கைகள் தன்னுடன் இருக்க வேண்டும் என்று அவள் மன்னனிடம் கூறவே அவனும் அதற்கு அனுமதி அளித்தான். அந்த இரு சகோதரிகளும் அரண்மனைக்கு வந்து ராணியுடன் இருக்கலானார்கள்.

ஒரு நாளிரவு இளையராணி ஒரு அழகான ஆண் குழந்தையைப் பெற்றாள். பொறாமைக்காரிகளான அவளது சகோதரிகள் அந்தகுழந்தையை ஒரு கூடையில் வைத்து ஆற்றில் விட்டு விட்டார்கள். அக்குழந்தைக்கு பதிலாக ஒரு நாய்க்குட்டியை அவர்கள் பிடித்து வந்து மயங்கிக் கிடந்த இளைய ராணியின் பக்கத்தில் படுக்க வைத்தார்கள். கண் விழித்ததும் தான் பெற்றது நாய்க்குட்டி என்பதைக் கண்டு இளையராணி'' எல்லாம் என்



ராணியோ கண்ணீர் வடித்து ''இப்படி எல்லாமா நான் பெற்றெடுக்க வேண்டும்?'' என்று கதறினாள்.

மன்னனும் கவலை கொண்டு ஆஸ்தான ஜோசியரிடம் அது பற்றிக் விசாரித்தார். அவரும் ''இளைய ராணி பெற்றெடுத்தவை மனிதப் பிறவிகளே அல்ல. அவள் உங்களோடு இருப்பது ஆபத்து. எங்கேயாவது அனுப்பி விடுங்கள்'' என்றார். மன்னனும் அவளை அரண்மனையிலிருந்து வெளியேற்றி விட்டான்.

பொறாமைக்கார சகோதரிகள் குழந்தைகளை விட்ட ஆற்றின் கரையில் ஒரு அந்தணர் வசித்து வந்தார். ஆற்றில் வந்த மூன்று குழந்தைகளையும் அவரே கண்டு எடுத்துக் கொண்டு போய்த் தம் குழந்தைகளைப் போல வளர்த்து வந்தார். அந்த மூன்று குழந்தைகளின் முகச்சாயல்களும் ஒன்று போல இருப்பது கண்டு அவர் ஆச்சரியப் பட்டார். அக்குழந்தைகளுக்கு அவர் மதன், மோகன், மோகினி என்ற பெயர்களை வைத்தார்.

கொஞ்ச நாட்களில் அந்த அந்தணர் நோய் வாய்ப்பட்டு இறந்து விட்டார். அக்குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களாகி விட்டதால் இனி தம்மைத் தாமே பார்த்துக் கொள்ள வேண்டியது தான் என்பதை உணர்ந்தார்கள். அதனால் அவர்கள் சம்பாதித்து வாழ்ந்து வந்தார்கள். ஒரு நாளிரவு

தலை விதி'' என்று கூறி ஆறுதல் அடைந்தாள்.

ஒரு வருடம் கழிந்தது. இளைய ராணி கர்ப்பமுற்று உரிய காலத்தில் மறுபடியும் ஒரு ஆண் குழந்தையை பெற்றபோது அவளது பொறாமைக் கார சகோதரிகள் அவளருகே தான் இருந்தார்கள். அக்குழந்தையையும் அவர்கள் ஒரு கூடையில் வைத்து அதே ஆற்றில் விட்டு விட்டு ஒரு பூனைக்குட்டியைப் பிடித்துக் கொண்டு வந்து இளையராணியருகே படுக்க வைத்தார்கள். இம்முறை தான் பெற்றது பூனைக்குட்டி என்று கண்டு இளையராணி தன் விதியை நொந்து கொண்டாள்.

இரண்டு ஆண்டுகளுக்குப் பின் இளையராணி கர்ப்பமுற்று உரிய காலத்தில் ஒரு பெண் குழந்தையைப் பெறவே அந்த பொறாமைக்கார சகேதரிகள் அக்குழந்தையையும் ஒரு கூடையில் வைத்து ஆற்றில் விட்டு ராணியின் பக்கத்தில் ஒரு மண் பொம்மையை வைத்து விட்டார்கள்.

அவர்களது வீட்டிற்கு ஒருவன் வந்தான். தனக்குப் பசியாக இருக் கிறது என்று அவன் கூறவே, மூவரும் அவனுக்கு உணவு அளித்து இரவில் படுத்துத் தூங்க வசதியும் செய்து கொடுத்தார்கள்.

மறுநாள் காலையில் எழுந்ததும் அவன் அம்மூவரிடமும் ''நான் இந்நாட்டு மன்னன். மாறுவேடத்தில் நாட்டின் நிலையை நேரில் காண இப்படி வந்தேன். உங்களுக்கு என்ன உதவி வேண்டுமானாலும் என்னை அணுகலாம்'' என்று கூறிவிட்டு அங்கிருந்து அரண்மனைக்குச் சென் றான். பிறகு மன்னன் ஒரு வீரன் வாயிலாக ஒரு பைநிறையத் தங்க நாணயங்களை அம்மூவருக்குக் கொடுத்து அனுப்பினான்.

மோகினி தங்க நாணயங்களைக் கண்டதும் எல்லோரும் ஒரு பெரிய வீட்டில் வாழ வேண்டும் என்று நினைத்தாள். மதனும் மோகனும் அவனது விருப்பத்தை நிறைவேற்றி விடவே வாங்கிய பெரிய வீட்டை மோகினி அழகு படுத்தலானாள். ஒருநாள் அவ்வழியே வந்த ஒரு யோகி நதிக்கரையில் ஒரு அழகிய மாளிகை இருப் பதைக் கண்டு ஆச்சரியப் பட்டார். மோகினி அவரைக் கண்டு வணங்கி தன் வீட்டில் ஏதாவது குறை இருக்கிறதா என்று கேட் டாள். அவரும் ''இங்கு ஒரு தங்க மரமும் தங்கக் கூண்டில் தங்கக் குருவியும் ஒரு தங்க வில்லும் இருந்தால் இன்னமும் அழகாக இருக்கும். இவை யாவும் ஒரு மலை மீது உள்ள அரண்மனையில் உள்ளன என்று கூறி அரண்மனைக்குப் போகும் வழியையும் சொல்லி விட்டுச் சென்றார்.

யோகி சொன்னது பற்றி மூவரும் யோசித்து மதன் அங்கு போய் அவற்றைக் கொண்டு வரவேண்டும் என்று தீர்மானித்தார்கள். மதனும் கிளம்பும் முன் தன் வாளை மோகி னியிடம் கொடுத்து ''எனக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்தால் இதன் ஒளி மங்கிவிடும்'' என்று கூறி விட்டுச் சென்றான். அவன் சென்ற சில மாதங்கள் வரை அந்த வாளின் ஒளி மங்காது இருப்பதை மோகினி கண்டு மகிழ்ந்து கொண்டிருந்தாள். ஒருநாள் திடீரென அதன் ஒளி மங்கி விட்டது.

அதற்குக் காரணம் இது தான். மதன் மலையை அடைந்து அரண்





மனைக்குப் போக மலையின் படிகளில் ஏறலானான். அப்போது ஒரு குரல் ''மதன்! இனிமேல் போகாதே'' என்றது. அப்போது மலை மீது ஏறும்போது திரும்பிப் பார்க்கக் கூடாது என்று யோகி எச்சரித்திருந்தது அவன் நினைவிற்கு வந்தது. எனவே அவன் திரும்பிப் பாராமல் மேலே அடி எடுத்து வைக்கவே அதே குரல் ''மதன்! உன்னோடு நானும் வருகிறேன்'' என்றது. அது தன்னை வளர்த்த அந்தணரின் குரல் போல இருந்தது கண்டு அவன் திரும்பிப் பார்த்தான். மறு வினாடியே அவன் கற்சிலை யாகி விழுந்து விட்டான்.

மதனுக்கு ஏதோ ஆபத்து என மோகினி கூறவே மோகன் தான் போய்ப் பார்ப்பதாகக் கூறி அவளிடம் ஒரு புல்லாங்குழலைக் கொடுத்து ''எனக்கு ஏதாவது ஆபத்து என்றால் இது இரண்டாக உடைந்து விடும்'' என்ற கூறிவிட்டுச் சென்றான். அவனும் மலையை அடைந்து அரண்மனைக்குச் செல்லப்படியில் ஏறினான். அப்போது மதன் பேசுவது போல ஒரு குரல் ''தம்பி! உன் பின்னால் தான் இருக்கிறேன், பார்'' என்று கேட்கவே மோகன் திரும்பிப் பார்த்தான். உடனே அவனும் கற்சிலையாகி விழுந்து விட்டான்.

புல்லாங்குழல் இரண்டாக உடைந்தது கண்டு மோகினி கண்ணீர் வடித்தாள். பிறகு தன்னைத் தேற்றிக் கொண்டு இனி தானே அங்கு போவது என்று அவள் தீர்மானித்துக் கொண்டாள். வழியில் விசாரித்ததில் தன் தமயன்கள் இருவரும் அந்த வழியில் தான் சென்றார்கள் என்று அவளுக்குத் தெரிந்தது. அவள் மலையை அடைந்து அரண் மனைக்குப் போகப் படியில் காலை வைத்த போது ஒரே கூச்சல் கேட்டது. அவள் அதைப் பொருட்படுத்தாமல் படிகளில் ஏறிப்போய் அரண் மனையை அடைந்தாள்.

அங்கே அவள் தங்க மரத்தையும் தங்கக் கூண்டையும் அதனுள் தங்கக்குருவியையும் பார்த்தாள். அந்தக் குருவி அவளைப் பார்த்து ''நான் உன் கட்டளைக்காகக் காத்துக் கொண்டிருக்கிறேன். உள்ளே ஒரு முரசின் மீது தங்க வில் உள்ளது. அந்த வில்லை எடுத்து முரசை அடித்தால் கற்சிலைகளாகக் கிடக்கும் உன் சகோதரர்கள் உயிர் பெற்று எழு வார்கள்'' என்றது. மோகினியும் அது கூறியபடியே செய்தாள். பிறகு

அதனிடம் ''கூண்டையும் வில்லையும் எடுத்துப் போய் விட முடியும். ஆனால் தங்க மரத்தை எப்படி எடுத்துச் செல்வது?'' என்று கேட்டாள்.

குருவியும் ''தங்கவில்லால் மரத்தை அடித்தால் உன் சகோதரனால் தன் கையால் அதைத் தூக்கிக் கொண்டு போக முடியும்'' என்றது. இதற்குள் மதனும் மோகனும் வந்து விட்டார்கள். மோகினி குருவி சொன்னதை அவர்களிடம் சொல்ல, மதன் வில்லால் அடித்து தங்க மரத்தைத் தன்கையில் தூக்கிக் கொண்டான். மற்றவற்றை இருவரும் எடுத்துக் கொள்ள மூவரும் நதிக் கரையிலுள்ள தம் மாளிகைக்கு வந்தார்கள்.

சில நாட்கள் கழித்து அவர்கள் மன்னனைத் தம் மாளிகைக்கு அழைத்தார்கள். மன்னனுக்கு விருந்து வைத்தார்கள். சாப்பிடும் தட்டில் முத்துக்களும் வைரங்களும் வைக்கப் பட்டிருக்கவே மன்னனும் ''இதையா சாப்பிடுவது? இது எங்காவது நடக்குமா?'' என்று கேட்டான். அப்போது கூண்டிலிருந்த தங்கக் குருவி'' ஏன் நடக்காது? ஒரு பெண் நாய்க் குட்டியையும் பூனைக் குட்டியையும் மண் பொம்மையையும் பெற்றெடுக்க முடியும் என்றால் இதுவும் முடியுமே'' என்றது. அப்போது மன்னனுக்கு அது சாதாரணக்குருவி அல்ல என்பது தெரிந்தது. அதனிடம் ''அப்படியானால் என் குழந்தைகள் எங்கே? உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டான்.

தங்கக் குருவியும் ''தெரியுமே. அவர்கள் உங்கள் எதிரில் தான் இருக்கிறார்கள். நாய்க்குட்டி, பூனைக் குட்டி, மண் பொம்மை என்றெல்லாம் இவர்களுக்கு பதிலாக பொறாமைக்காரச் சகோதரிகளால் உங்கள் மனைவியின் பக்கம் வைக்கப்பட்டு இவர்கள் ஆற்றில் விடப் பட்டார்கள். இப்போது உங்கள் மனைவி காட்டில் இருக்கிறாள். தேடி அழைத்து வாருங்கள்'' என்றது.

மன்னன் தன் இளையராணியைத் தேடி அழைத்து வந்தான். அதன் பின் மதன், மோகன், மோகினி ஆகியோரையும் ராணியையும் அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு போய் சுகமாக வாழ்ந்தான்.



# பிசாசுகள் கொடுத்த பரிசுகள்

(தெலுங்கு ஆதாரக்கதை
கே.வம்சிகிருஷ்ணா, திருப்பதி)







கந்தன் காட்டூரில் ஒரு விவசாயி. அவன் எவ்வளவு தான் உழைத்தாலும் ஏழையாகவே இருந்தான். குடும்பச் செலவுக்குப் போதிய பணம் கிடைக்காததால் அவனது மனைவி அவனிடம் பட்டணத்திற்குப் போய் வேலை செய்து நிறையப் பணம் சம்பாதித்து வருமாறு கூறினாள்.







கந்தனும் தன் மனைவி கூறியபடி பட்டணத்திற்குப் புறப்பட்டான். அவள் கொடுத்த உணவு மூட்டையுடன் உச்சி வேளை வரை நடந்து கொண்டே இருந்தான். பசி எடுக்கவே அவன் ஒரு மரத்தின் கீழ் உட்கார்ந்து உணவு மூட்டையை அவிழ்த்து இரு தோசைகளை எடுத்தான். அவற்றில் ஒன்று பெரியது. மற்றது சிறியது.







அவன் தனக்குத் தானே சற்று உரக்க ''எதை முதலில் சாப்பிட வேண்டும்? பெரியதையா அல்லது சிறியதையா?'' என்று சொன்னான். அப்போது இரு பிசாசுகள் அந்த மரத்தின் மீது இருந்தன. அதில் பெரிய பிசாசு சிறிய பிசாசிடம் ''ஐயோ! இவன் நம்மை விழுங்கப் போகிறானே'' எனக் கூறி இரு பிசாசுகளும் கந்தன் முன் நின்றன.



அவை கந்தனிடம் ''எங்களைக் கொன்றுவிடாதே'' என்று கெஞ்சின. அந்தப் பிசாசுகள் பயந்துவிட்டன என்று கந்தன் புரிந்து கொண்டான். உடனே அவன் அவற்றிடம் ''உங்களைக் கொல்லாது விட்டுவிட்டால் எனக்கு என்ன கொடுப்பீர்கள்?'' என்று கேட்க, அவை ''ஒரு வரம் கொடுக்கிறோம்'' என்றன.



பிசாசுகளும் ஒரு சிறு பெட்டியைக் கொடுத்து ''இதை நீ மூன்று தடவை தட்டி பணம் கேட்டால் இது அதைக் கொடுக்கும்'' என்றன. கந்தனும் அதை வாங்கிக் கொண்டு தன் பயணத்தைத் தொடர்ந்தான். இருட்டிவிட்டது. அப்போதும் அவன் பட்டணத்தை அடையவில்லை.



வழியில் ஓரிடத்தில் ஒரு வீட்டைக் கண்டான். அதிலிருந்த கிழவி அவன் அன்றிரவு அங்கு தங்க அனுமதித்தாள். அப்போது அவன் தன் பெட்டியைக் கொடுத்து ''இதை பத்திரமாக வைத்திரு. காலையில் வாங்கிக் கொள்கிறேன். இது பணம் கொடுப்பது'' என்றான். கிழவியும் காலையில் கந்தனிடம் அதே போன்ற வேறொரு பெட்டியைக் கொடுத்தாள்.



பணம் கிடைக்கும் என்ற மகிழ்ச்சியில் கந்தன் பட்டணத்திற்குப் போகாமல் தன் ஊருக்குத் திரும்பி வந்தான். பெட்டியை தட்டினான். பணம் வரவில்லை. அவன் மறுபடியும் அந்த மரத்திற்குப் போய் பிசாசுகளைப் பார்த்தான். இந்தத் தடவை அவை ஒரு பாத்திரத்தைக் கொடுத்து ''இதை நீ சூரிய வெளிச்சத்தில் வைத்துவிட்டு இதனிடம் உணவு வேண்டும் என்று கேட்டால் இது உணவைக் கொடுக்கும்'' என்று கூறி அனுப்பின.



கந்தன் மீண்டும் முன் தினம் போய்த் தங்கிய வீட்டை அடைந்தான். கிழவியும் அவனை வரவேற்கவே அவனும் தான் கொண்டு வந்த பாத்திரத்தை அவளிடம் கொடுத்து அதன் சக்தியைக் கூறி ''இதை இன்றிரவு பத்திரமாக வைத்திரு. நாளைக் காலையில் வாங்கிக் கொண்டு போகிறேன்'' என்றான்.



கிழவி மறுநாள் காலை அப்பாத்திரத்தைப் போன்ற வேறொரு பாத்திரத்தைக் கொடுத்தாள். வீட்டிற்குப் போய் தான் ஏமாந்தத்தைக் கண்டு அவன் மீண்டும் போய் பிசாசுகளைக் கண்டு நடந்ததைக் கூறினான். அவை அவனிடம் ஒரு தடியைக் கொடுத்து ''இதால் மூன்று முறை தரையைத் தட்டினால் இது அப்போது இதைத் தட்டியவனை அடித்து நொறுக்கும்'' என்றன.



கந்தன் அந்தத் தடியுடன் கிழவியின் வீட்டிற்குப் போய் அதை அவளிடம் ''இதை மூன்று முறை தரை மீது தட்டாதே. பத்திரமாக வைத்திருந்து நாளைக் காலையில் கொடு'' என்றான்.



கிழவியும் ''இதைத் மூன்று முறை தட்டினால் ஏதோ விலையுயர்ந்த பொருள் கிடைக்கும்'' என்று எண்ணி, அதால் மூன்று முறை தட்டினாள். மறு விநாடியே தடி கிழவியை அடிக்கத் தொடங்கிவிட்டது. அவள் கதறவே கந்தன் ''நீ என்னை ஏமாற்றிய பெட்டியையும் பாத்திரத்தையும் கொடு. அப்போது தடி உன்னை அடிப்பதை நிறுத்தும்'' என்றான்.



கிழவியும் அந்த இரண்டையும் எடுத்து வந்து கந்தனிடம் கொடுக்க, கந்தன் தடியைத் தொட்டு அதையும், பெட்டியையும் பாத்திரத்தையும் எடுத்துக் கொண்டு தன் வீட்டை அடைந்தான். அதற்குப் பின் அவனுக்கு பணத்திற்கும் உணவிற்கும் குறைவே இருக்கவில்லை. அவனும் அவன் மனைவியும் சுகமாக வாழ்ந்தார்கள்.

# நமது இந்தியா

1. டில்லியின் செங்கோட்டையை ஷாஜஹான் கட்டினார். ஆக்ராவில் உள்ள செங்கோட்டையை யார் கட்டினார்?
2. அமிர்தசரசின் பொற்கோவிலின் நிர்மாணத்தில் இரு சீக்கிய குருமார்கள் தொடர்பு கொண்டு உள்ளார்கள். அவர்கள் யார்?
3. இந்தியாவிலேயே மிகப் பெரிய மசூதி எது? அதைக் கட்டியவர் யார்?
4. இப்போது ராஷ்டிரபதி பவன் எனப்படுவது முன்பு வைஸ்ராய் ஹௌஸ் எனப்பட்டது. அது கட்டப்பட்ட குன்றின் பெயர் என்ன?
5. ஒரு முகலாய மன்னர் தன் இறந்த மனைவியின் நினைவில் அவளது சமாதியின் மீது அழகிய கட்டிடம் கட்டினார். அது போல மற்றொரு மன்னருக்கு அவரது மனைவி அவரது சமாதியின் மீது ஒரு நினைவுக் கட்டடம் கட்டினார். அந்த இரு கட்டடங்களின் பெயர்களையும். இரு மன்னர்களையும் அவர்களது மனைவி களையும் கூறுங்கள்.



6. இந்தப் படம் இந்தியாவிலேயே மிகப் பெரிய தலைவாசல் எனப் படுவது. இது எங்கே உள்ளது? இதை நிர்மாணித்தவர் யார்?
7. ஹைதராபாதின் சார்மினார் வரலாற்றுச் சிறப்புடையது. இதை ஒரு தொற்று நோயுடன் தொடர்பு படுத்திப் பேசுகின்றார்கள். அது என்ன?
8. பம்பாயின் 'கேட் வே ஆஃப் இந்தியா'வும் டில்லியின் 'இந்தியா கேட்'டும் நினைவுச் சின்னங்கள். அவை எந்த நிகழ்ச்சிகளின் சின்னங்கள்?
9. மகாராஷ்டர மாநிலத்தில் ஒரு பெரிய அரண்மனை அரசியல் கைதிகளைச் சிறை வைக்க ஆங்கிலேயரால் பயன் படுத்தப்பட்டது. அந்த அரண் மனையின் பெயர் என்ன? அது எங்கே உள்ளது? அங்கு சிறைப்படுத்தப் பட்ட ஒருவர் அங்கேயே இறந்து போனார். அவர் யார்?
10. அஜந்தா, எல்லோரா குகைகளின் சிறப்பு என்ன?

*(விடைகள் அடுத்த மாதம்)*

## டிசம்பர் வினாக்களின் விடைகள்

1. *எம்.சி. மேஹ்தா*
2. *ரூர்கேலா*
3. *ஹோய்சாலா*
4. *சுப்பிரமணியர்*
5. *முக்லிஸ் கட்*
6. *சோமோ*
7. *கிராம்பு*
8. *கிரந்த எழுத்து*
9. *குர்பசன் சிங் ரன்தாவா*
10. *சி.ராஜகோபாலாச்சாரியார்*



# மகாவிஷ்ணு

**பா**ல் கடலில் உள்ள மூன்று மலைச் சிகரங்கள் தங்கம், வெள்ளி, இரும்பால் ஆனவை. இந்த மலை களினிடையே அடர்ந்து வளர்ந்த மரங்கள் இருந்தன. அந்தக் காட்டில் கஜேந்திரன் என்ற யானை தன் மனைவிகளான பல பெண் யானை களுடன் வாழ்ந்து வந்தது. ஒரு முறை அது தாகம் தீர்த்துக் கொள்ள மற்ற யானைகளுடன் அக்காட்டில் இருந்த பெரிய குளத்திற்குச் சென்றது.

குளத்தின் தெள்ளத் தெளிய நீரைக் குடித்தபின் அது தண்ணீரில் குளிக்க ஆசைப்பட்டுத் தன் மனைவிகளான பெண் யானைகளோடு தண்ணீரில் இறங்கிவிட்டது. குளத்து நீரைக் கலக்கி அது தன் மனைவிகளோடு ஜலக்கிரீடை செய்ய ஆரம்பித்தது. அப்போது அக் குளத்தில் வாழ்ந்து வந்த பயங்கர முதலை அதன் காலைப் பலமாகப் பிடித்துக் கொண்டது.

கஜேந்திரன் வலி பொறுக்க முடியாமல் அலறியது. அது கேட்டு மற்ற யானைகள் பயந்து கரைக்கு ஓடி விட்டன. அவற்றிற்கு என்ன செய்வ தென்றே தெரியவில்லை. கண்ணீர் உகுத்து நின்றன.

கஜேந்திரனோ முதலையின் பிடிப் பிலிருந்து தப்ப முயன்றது. காலை இழுத்தது. அப்படியும் இப்படியும் ஆடிப் பார்த்தது. ஆனால் எந்த முயற்சியும் பலன் அளிக்கவில்லை. முதலையின் பிடிப்பு மேலும் பலமாகவே கஜேந்திரன் தன் தந்தத் தால் அதனைக் குத்த முயன்றது. முதலையோ துள்ளிக் குதித்து யானை மீது விழுந்து அதனை படுகாயப்



படுத்தியது ஆனாலும் தன் பிடிப்பை விடவில்லை. கஜேந்திரனின் உடலில் இருந்து இரத்தம் வெளிப் பட்டு ஒழுகலாயிற்று. அப்போதும் அது முதலையை பயமுறுத்திப் பார்த்தது. ஆனால் முதலை அதன் காலை மேலும் பலமாகக் கடிக்க லாயிற்று.

கஜேந்திரன் முதலையைத் தன் மற்ற காலால் மிதிக்க முயன்றது.

ஆனால் முதலையோ அதனை குளத்தின் நடுவே இழுத்துச் செல்ல லாயிற்று. கஜேந்திரன் திமிறி அதனிடமிருந்து தப்ப முயல, முதலை அதன் காலை தன் பற்களால் இறுகப் பற்றி இழுக்க, இப்படியாகப் போராட்டம் வெகு காலம்வரை நடந்து கொண்டே இருந்தது. கஜேந் திரன் தன்னம்பிக்கையோடு போராட லாயிற்று. தன்னால் முடியாமலா போய்விடப் போகிறது என்று கர்வத்தோடு முதலையைத் தாக்க முயன்றது. ஆனால் அதன் சக்தி குறைந்து கொண்டே போகலாயிற்று. முதலைக்கோ நீரில் இருக்க இருக்க பலம் அதிகரித்துக் கொண்டே இருந்தது. அப்போது தான் கஜேந் திரன் மனதில் ''அடடா! குளத்தில் தண்ணீர் குடித்து தாகத்தைக் தணித்துக் கொள்ளத்தானே வந்தேன். இதில் இறங்கி ஜலக்கிரீடை செய்யா மல் இருந்திருந்தால் இப்படிப்பட்ட ஆபத்தில் அகப்பட்டிருக்க வேண் டாமே. என் அறிவீனத்தால் வந்த வினை இது'' எனக் காலம் கடந்து எண்ணி வருந்தியது.

அப்போது தான் அதற்குத் தனக்கும் மேலான சக்தி ஒன்று இருக்கிறது என்பது நினைவிற்கு வந்தது. ''இனி என்னைக் காப்பாற்ற யார் இருக்கிறார்கள்? தெய்வமே! நீதான் இனி எனக்குத் துணை. உன்னையல்லால் வேறு கதி எனக்கு இல்லை'' என எண்ணியது.

''கடவுளே! பகவானே!! ஆதி மூலமே!! அண்ட சராசங்களின் ஆதிகர்த்தா நீயே! என்னைப் போன்ற மதி இழந்தவர்களைக் காக்க நீதான் தக்க தருணத்தில் வருகிறாய். மேலும் கஷ்ட காலத்தில் தான் ஒருவனுக்கு உன்னைப் பற்றிய நினைவே வருகிறது. அதற்கு முன் என்னைப் போல தான் என்ற கர்வத்தில் மூழ்கிக் கிடக்கிறான். கஷ்டம் வரும் போது தான் கண் திறக்கிறது'' என கஜேந்திரன் எண்ணமிட்டுக் கொண்டு இருந்தது.

இந்த விதமாக அது கடவுளைப் பற்றி நினைக்க ஆரம்பித்ததுமே முதலைக் கடியால் ஏற்பட்டு வந்த வலி கொஞ்சம் கொஞ்சமாகக் குறையலாயிற்று. அப்போது யானை ''ஆதிமூலமே! அநாதை ரட்சகா! சகலஜீவராசிகளின் துயர் துடைப் பவன் நீ! இவ்வுலகையே படைத்துக் காப்பவன் நீ! எனவே உன்னையே நம்பி உன் பாதம் சரண் அடந்துள்ள என்னைக் காக்க வேண்டும்'' எனத் துதிக்கலாயிற்று.

பின்னர் அது ''சர்வேஸ்வரா! என் சக்தி குறைந்து கொண்டே போகிறது. இன்னும் சற்று நேரத்தில் பேசும் சக்தியைக் கூட இழந்து விடுவேன் போலிருக்கிறது. உன்னை எவ்வாறு துதி செய்ய முடியும்? என் உடலும் தளர்ந்து கொண்டே போகிறது. நினைவு இழந்து கீழே விழுந்து விடுவேனோ என்றுகூட நான் அஞ்சுகிறேன். என்னை நீ காப்பாயோ அல்லது கை விடுவாயோ எல்லாம் உன் பொறுப்பில் விட்டுவிடுகிறேன். உன்னை விட்டால் என் மீது அக்கறை கொள்பவர் யார் இருக்கிறார்கள்?'' என்று கூறித் தன் துதிக்கையை உயரத் தூக்கி மேலுலகில் உள்ள பெரு மானைக் கூப்பிடுவது போலச் சைகை செய்தது.

அப்போது முதலையின் பலம் மேலும் குறைந்துவிட்டது போலவும் அதன் பிடிப்பு முன் போல இறுக்க மாக இல்லை என்பதனையும் கஜேந்திரன் உணர்ந்தது. ஆனால் ஆட அசைய முடியவில்லை. கண்களை



மூடிக்கொண்டு எதுவும் செய்ய முடியாது அது நின்றது.

அதன் கூக்குரல் விஷ்ணுவின் காதில் விழுந்துவிட்டது. அவரும் ஓடோடி வந்தார். ஆகாய முழு வதுமே அவர் அடைத்து நின்றது போலவும் கஜேந்திரன் உணர்ந்தது. விஷ்ணு தன் சக்கராயுதத்தை விட்டு தன் கையால் அபயக் குறியை கஜேந்திரனுக்குக் காட்டினார்.

வேகமாகச் சுழன்று வந்த சக்கர ஆயுதம் நீரில் பாய்ந்து முதலையின் தலையை வெட்டித் துண்டாக்கியது. ஆனால் என்ன ஆச்சரியம்! அந்த முதலை ஒரு கந்தர்வனாக மாறியது. விஷ்ணுவை வணங்கி அவன் நின்றான் அவன் முன் பிறப்பில் தேவலர் என்ற மகரிஷி நீரில் நின்று ஜபம் செய்து கொண்டிருந்த போது நீரில் நுழைந்து அவரது கால்களைப் பிடித்தானாம். அதனால் ஜெபம்



கலையவே ரிஷி கோபம் கொண்டு அவனை நீரில் வாழும் முதலையாகப் பிறக்கும்படி சபித்துவிட்டார். அவன் பயந்து அவரிடம் சாப விமோசன த்தைக் கேட்கவே அவரும் கோபம் தணிந்து விஷ்ணுவின் சக்கராயுதம் அவன் மீது பட்டதும் கந்தர்வனாகி விடுவான் எனக் கூறினார்.

முதலையிடமிருந்து விடுபட்ட கஜேந்திரனை அவர் கரை சேர்ப்பித்து அதன் உயர்ந்த நெற்றியைத் தம் திருக்கையால் தடவிக் கொடுத்தார். கஜேந்திரன் இழந்த சக்தியைப் பெற்றான். அவனது களைப்பு அகன்றது. திருமாலின் திருக்கைப் பட்டதும் கஜேந்திரனுக்குப் புதிய சக்தியே பிறந்தது! அது மட்டுமல்ல, அதற்குத் தன் முன் பிறப்பைப் பற்றிய முழு விவரமும் தெரிந்தது.

கஜேந்திரன் முன் பிறப்பில் இந்திரத்யும்னன் என்ற மன்னனாக இருந்தவன். அவன் விஷ்ணு பக்தன். ஒரு முறை அவன் விஷ்ணுவின் தியானத்தில் மூழ்கி இருந்தபோது அவனைக் காண அகத்திய முனிவர் வந்திருந்தார். தன்னை மன்னன் சரியாகக் கவனியாதது கண்டு அவர் கோபம் கொண்டு அவனை ஒரு யானையாகப் பிறக்கும்படிச் சபித்து விட்டார். அந்த மன்னன் தான் கஜேந்திரனாகப் பிறந்திருந்தான். அவன் பின்னர் முதலையிலிருந்து விடுவிக்கப்பட்டு மகா விஷ்ணுவின் அருளால் மோட்சம் அடைந்தான்.

இந்த கஜேந்திரன் மோட்சக் கதையை சூத மகர முனிவர் நைமிசாரண்ய வனத்தில் சௌனகர் முதலிய முனிவர்களுக்குக் கூறினார். அதைக் கேட்ட அவர்கள் ''ஆகா! இது சகல ஜீவராசிகளுக்கும் நீதி புகட்டும் கதை. விஷ்ணுவைச் சரணடைந்தவர்களுக்கு எவ்விதப் பயமும் இல்லை என இது தெளிவாக விளக்குகிறது'' என்றார்கள்.

சூதரும் ''ஆமாம். அவனன்றி ஓரணுவும் அசையாது என்பதையும் அவனை நம்பினோர் கெட்டதில்லை என்பதையும் உலகுக்கு எடுத்துக் காட்டுகிறது'' என்றார். அப்போது முனிவர்கள் ''இந்த கஜேந்திர மோட்சக் கதையிலிருந்து ஆதி மூலமாகிய மகாவிஷ்ணு உலகைப் படைத்து காத்து வருகிறார் என்பது புலனாகிறது. எனவே மகா விஷ்ணுவின் புனித சரிதத்தைக் கேட்க விரும்புகிறோம். எனவே நீங்கள் அவரது சரிதத்தைக் கூறுங்கள்.

நாங்கள் கேட்டு புண்ணிய பலன் அடைகிறோம்'' என்றார்கள்.

சூதரும் ''ஆகா! வியாசர் பகவானின் லீலைகளையெல்லாம் பாகவதம் என்ற வடிவில் தம் மகனான சுகருக்குக் கூறினார். அதனை சுகரிடமிருந்து பரீட்சித்து மன்னன் கேட்டு அறிந்தான். கஜேந்திரனைக் காக்க வந்ததை விஷ்ணுவின் ஆதி அவதாரம் என்றும் கூறுவார்கள். விஷ்ணு பல அவதாரங்கள் எடுத்தார். அவற்றுள் தசாவதாரம் எனப்படும் பத்து அவதாரங்கள் குறிப்பிடத்தக்கவை யாகும்.

நாராயணன் என்ற சொல்லிற்கு நீரில் வசிப்பவன் என்றும் நரர் களின்அதிபன் என்றும் பொருள் கூறுவார்கள். மகாவிஷ்ணு நீரைச் சிருஷ்டிக்க, ஜீவராசிகளில் முதலில் மீனினம் தோன்றியது. எனவே அவரும் மீனாகி மச்சாவதாரம் எடுத்தார். மகாவிஷ்ணு பால் கடலில் சேஷனைப் படுக்கையாகக் கொண்டு இருந்தார். சேஷன் பாம்பின் உருவில் ஆயிரம் தலைகளை கொண்டு இருந்தான் மகாவிஷ்ணுவின் தொப் புளில் இருந்து தோன்றிய தாமரையில்தான் பிரம்மா தோன்றி னார். அவர்தான் எல்லா ஜீவராசி களையும் படைக்கும் தொழிலை மேற் கொண்டார்.

ஒருமுறை சத்திய விரதர் என்ற ராஜரிஷி நதியில் குளித்து நாராயண



னுக்கு அர்க்கியம் விடத் தண்ணீரை அள்ளினர். அப்போது அவரது உள்ளங்கை நீரில் தங்க நிறத்தில் ஒரு சிறிய மீன் குஞ்சு வந்தது. சத்திய விரதர் அதனை நீரில் போடப் போனார். அப்போது அது ''அரசே! எங்கள் மீனினம் பொல்லாதது. சிறிய மீன்களைப் பெரிய மீன்கள் விழுங்கி விடும். ஒரு வேளை ஒரு சிறிய மீன் அவைகளுக்கு அகப்படாது தப்பி னாலும் யாராவது ஒரு மீனவனின் வலையில் அகப்பட்டாக வேண்டும். இந்த ஆபத்துகளிலிருந்து தப்பவே நான் உங்களது உள்ளங்கைத் தண்ணீருக்குள் வந்தேன். என்னை மறுபடியும் நீரில் விட்டு விடா தீர்கள்'' எனக் கெஞ்சிக் கேட்டது.

சத்தியவிரதர் அந்த மீன் குஞ்சை தன் கமண்டலத்து நீரில் போட்டு எடுத்துக் கொண்டு தலை நகருக்குச் சென்றார். அவர் மன்னராக இருந்தும் தவம் செய்து விஷ்ணு பக்தராக விளங்குபவர். சிறந்த அறிவாளி. கமண்டலத்தில் விடப்பட்ட மீன் குஞ்சு மறுநாளே வளர்ந்து பெரிதாகி விட்டது. அது கண்டு மன்னர் அதனை பெரிய நீர்த் தொட்டியில் விட்டார். அதற்கு அடுத்த நாள் அது மேலும் பெரிதாகிவிடவே தன் பூங்காவின் குளத்தில் விட்டார். அது இன்னமும் பெரிதாகவே மன்னர் அதனை ஒரு ஏரியில் கொண்டு போய் விட்டார். அது மேலும் பெரிதாகவே மன்னர் அதனை கடலில் கொண்டு போய் விட்டார்.

அப்போது அந்த மீன் ''ராஜ ரிஷியே! உன்னிடம் சரண்புகுந்த என்னை இப்படிக் கடலில் விடுவது நியாயமா? முதலையோ திமிங் கலமோ வந்து என்னை விழுங்கி விடுமே'' என்றது. சத்திய விரதரும் ''நீ நாள் தோறும் வளர்ந்து இப்போது மிகப் பெரிய மீனாகிவிட்டாய். உன்னை வேறு எங்கே விடுவது? இவ்வளவு பெரிதான உன்னை எதனால் விழுங்க முடியும்? முடியவே முடியாதுதானே? அத னால் பயப்படவே வேண்டாம்'' எனக் கூறினார்.

(தொடரும்)





# சொந்தம் விட்டுப் போகுமா?

**க**ண்ணன் கஞ்சனூரில் உள்ள ஒரு ஏழை இளைஞன். அவனுக்குத் தாய் தந்தையர் இல்லை. அனாதையாக விடப்பட்ட அவன் அந்த ஊரில் கூலி வேலை செய்தும் சத்திரம் சாவடி போன்ற பொது இடங்களில் இருந்தும் காலம் கழித்து வந்தான் ஒருநாள் அவன் அந்த ஊர் சத்திரத்தில் படுத்திருக்கையில் அங்கு இளம் பெண் ஒருத்தி கையில் ஒரு சிறு அடுக்கை எடுத்துக் கொண்டு சுற்றிலும் பார்த்தவாறே ஒரு மூலையில் உட்கார்ந்தாள்.

அவள் அந்த அடுக்கிலிருந்து எதையோ எடுத்து மிரள மிரளப் பார்த்தவாறே வாயில் போட்டுக் கொண்டு அவசர அவசரமாக விழுங்கலானாள். அதைக் கண்ட கண்ணன் அவளருகே போய் ''யாரம்மா நீ? நீ ஏன் பயந்து பயந்து எதையோ சாப்பிடுகிறாய்?'' என்று கேட்டான். அதைக் கேட்ட அவள் ''நான் என் சிற்றன்னையின் கொடுமைகளுக்கு ஆளாகியுள்ளவள். என் தந்தை காளிமுத்து என் தாய் இறந்த பின் காமாட்சி என்பவளை மணந்து கொண்டார். என் சிற்றன்னை என்னிடம் வீட்டு வேலைகளை எல்லாம் செய்யச் சொல்வதோடு எனக்குச் சரியாக சாப்பாடும் போடுவது இல்லை. நேற்று அதிரசம் வார்த்து வைத்தாள். அதில் ஒன்றுகூட எனக்குத் தராமல் மூடி பத்திரமாக வைத்து விட்டாள். இன்று என் தந்தையும் சிற்றன்னையும் ஒரு கல்யாணத்திற்குப் போயிருக்கிறார்கள். அவர்கள் திரும்பி வர வெகு நேரம் ஆகும். அதனால் என் சிற்றன்னை ஒளித்து வைத்த அதிரசத்தைத் தேடிக் கண்டு பிடித்து எடுத்து வந்து அவற்றைத் தின்று கொண்டிருக்கிறேன்'' என்றாள்.

அதைக் கேட்ட கண்ணன் ''ஓ! நீ காளிமுத்துவின் மகள் பொன்னியா?'' என்று கேட்டான். அவளும் ''ஆமாம்! என் பெயர் உனக்கு எப்படித்

-சிவனார் செல்வன் -



தெரியும்? நான் இது வரை உன்னைப் பார்த்ததே இல்லையே. நீ யார்? இந்த ஊரிலேயே இருப்பவனா?'' என்று கேட்டாள்.

அவனும் ''ஆமாம் இந்த ஊர்க் காரன்தான். என் பெயர் கண்ணன். உன் தந்தை ஒரு வகையில் என் மாமன். ஒரு காலத்தில் என் தாய் தந்தையர் உன் பெற்றோரின் பக்கத்து வீட்டுக்காரர்கள். அப்போது எனக்கு எட்டு வயது. உனக்கு நான்கு வயது. உன் தாயார் என் தாயாரிடம் உன்னை எனக்கு மணம் செய்து வைப்பதாக அடிக்கடி கூறி வந்தாள். ஆனால் திடீரென இரு குடும்பத்தினரும் ஏதோ காரணத்தால் சண்டை போட்டுக் கொண்டு பேசாமல் இருந்துவிட்டார்கள். பிறகு என் தாய் தந்தையர் இறந்துவிடவே என்னை கவனிப்பார் இல்லை. வீடுவாசல் எதுவும் இல்லாததால் சத்திரம் சாவடி என்ற இடங்களில் இருந்து கூலி வேலை செய்து காலம் கழிக்கிறேன் உன் நிலை கூட இப்போது பரிதாப கரமாக இருக்கிறதே'' என்றான்.

பொன்னியும் '' என்ன செய்வது? எல்லாம் அவரவர் அதிர்ஷ்டப் படிதான் நடக்கும்'' என்று கூறி விட்டுப் போனாள். அவள் சென்ற பின் கண்ணன் யோசனையில் ஆழ்ந் தான் முடிவில் காளிமுத்துவைக் கண்டு பொன்னியைத் தனக்கு மணம் செய்து வைக்கும்படியும் தான் அவனது வயல், விவசாயத்தை பார்த்துக் கொள்வதாகவும் சொல்லி பொன்னியை அவளது சிற்றன்னை யின் கொடுமைகளிலிருந்து விடு விக்க வேண்டும் என்றும் தீர் மானித்துக் கொண்டான்.

மறுநாள் அவன் காளிமுத்துவின் வீட்டிற்குப் போய் பொன்னியைத் தனக்குத் திருமணம் செய்து வைக்கும் படியும் கேட்டான். காளிமுத்துவும் ''நீ எனக்கு துரத்து உறவினன் என்பதால் வீடு வாசல், அப்பா, அம்மா, அண்ணன், தம்பி, அக்கா, தங்கை என்று யாருமே இல்லாத உனக்குப் பொன்னியைக் கொடுப் பதா? இது பற்றி நானாக முடிவு எதுவும் எடுக்கமுடியாது. நம் இரு குடும்பங்களுக்கும் இடையே இருந்த தொடர்பும் விட்டுப் போய் பல ஆண்டுகளாகி விட்டது. காமாட்சி யும் அப்போதைய காமாட்சியாக இப்போது இல்லை. தன்னை

உயர்வாக எண்ணிக் கொண்டிருக்கிறாள். உன்னைத் தூக்கிஎறிந்து பேசினாலும் பேசி விடுவாள். அதனால் இது விஷயமாக என் மனைவி காமாட்சியைக் கேட்காமல் எதுவும் செய்ய முடியாது'' என்றான்.

அப்போது வேக வேகமாக காமாட்சி அங்கே வந்து ''நீங்கள் இருவரும் பேசியதைக் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். நம் வீட்டு வாசல்படி ஏறிவந்து இவன் திருமணம் பற்றியா பேசுகிறான்? அதற்கு என்ன துணிச்சல்?'' என்று கத்தியவள் பொத்தென்று விழுந்து விட்டாள். அதைக் கண்ட காளிமுத்து ''ஏன் இப்படிக் கத்தி ரத்தக் கொதிப்பை வரவழைத்துக் கொள்கிறாய்'' என்று கலவரப்பட்டவாறே கூறினான்.

காமாட்சி கைகால் அசையாமல் கிடப்பதைப் கண்ட கண்ணன் ''மாமா! முதலில் மாமியைத் தூக்கிக் கொண்டு போய்க் கட்டிலில் படுக்க வைப்போம். அதன் பின் நான் ஓடிப் போய் வைத்தியரை அழைத்து வருகிறேன்'' என்றான். மறு வினாடியே இருவரும் காமாட்சியைத் தூக்கிக் கொண்டு போய்க் கட்டிலில் படுக்க வைத்தார்கள். பொன்னியும் சமையல் கட்டிலிருந்து ஓடிவந்து காமாட்சிக்குக் காற்றுபட விசிறியால் விசறலானாள்.

கண்ணன் போய் சில நிமிடங்களில் வைத்தியரோடு வந்து விட்டான். வைத்தியரும் காமாட்சியின் உடல் நிலையைப் பரீட்சித்துப்



பார்த்துவிட்டு ஏதோ மாத்திரைகளையும் குளிகைகளையும் சூரணத்தையும் அவளது வாயில் போட்டு வெந்நீர் விட்டு விழுங்க வைத்தார். காமாட்சி மெதுவாகக் கண்ணைத் திறந்து பார்த்தாள்.

அப்போது வைத்தியர் அவளிடம் ''என்னம்மா இது? நீ கத்திப் பேசி ரத்தக் கொதிப்பை அதிகரித்துக் கொள்ளக் கூடாது என்று நான் உன்னிடம் எவ்வளவோ தடவை சொல்லி இருக்கிறேனே. இந்த தடவை நீ கத்திப் பேசி ரத்தக் கொதிப் போடு பக்கவாதத்தையும் வரவழைத்துக் கொண்டுவிட்டாய். உன் கைகால்களில் சர்ப்பகந்தி இலைகளின் சாற்றைத் தடவி தினமும் கைகால்களை ஒரு மணி நேரத்திற்கு நீவி விட வேண்டும். நீயும் எந்த

வேலையும் செய்யக் கூடாது. படுத்துப் பல மாதங்களுக்கு ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும். நம் ஊரின் பக்கம் உள்ள மலைக் காட்டில்தான் சர்ப்பகந்தி நிறைய வளர்கிறது. ஒருவர் தினமும் அங்கு போய் அந்த இலைகளைப் பறித்து வர வேண்டும். இதை எல்லாம் செய்தாலே நீ குணமடைவாய்'' என்றார். அப்போது காமாட்சி ''இதை எல்லாம் செய்ய எனக்கு யார் இருக்கிறார்கள்?'' என்று புலம்பலானாள். அப்போது கண்ணன் ''மாமி! நான் இருக்கிறேன். என்னதான் சண்டை போட்டுக் கொண்டாலும் சொந்தபந்தம் விட்டுப் போகாது. தினமும் பச்சிலை எடுத்து அதன் சாற்றை உங்கள் கைகால்களில் தடவி நீவி விடுகிறேன்'' என்றான். அதைக்கேட்ட காமாட்சியின் மனம் நெகிழ்ந்து போயிற்று. அவள் அவனுக்கு நன்றி தெரிவிப்பது போலப் பார்த்து ''கண்ணா! நான் உன்னை மதிக்காமல் ஏதேதோ பேசினேன். நீயோ அதை எல்லாம் மனதில் வைத்து கொள்ளாமல் எனக்குப் பணி புரிவதாகக் கூறினாய். உண்மையில் நான் தான் சொந்த பந்தங்களை மறந்து விட்டேன்'' என்று கூறினாள்.

அப்போது காளிமுத்து கண்ணனைப் பார்த்து ''நன்றாகச் சொன்னாய் கண்ணா! சொந்தபந்தம் விட்டுப் போகாதுதான். நீ இனிமேல் என் வீட்டில்தான் இருக்கப் போகிறாய். உன் மாமியின் சிகிச்சையில் உதவி புரிவதோடு எனக்கும் என் விவசாயத்தில் உதவப் போகிறாய் ஆமாம். என் மாப்பிள்ளையும் நீதான். முன்பு என் முதல் மனைவியும் உன் தாயாரும் பேசிக் கொண்டபடி உனக்குப் பொன்னியைத் திருமணம் செய்து வைக்கிறேன்'' என்றான்.

அது கேட்டுப் பொன்னியின் முகம் மலர்ந்தது. காமாட்சியும் கண்ணனைப் பார்த்து ''மாப்பிள்ளை! இனிமேல் எனக்குக் கவலை இல்லை. நீங்கள்தான் இருக்கிறீர்களே'' என்றாள்.

காளிமுத்துவும் கண்ணனைத் தன் வீட்டிலேயே வைத்துக் கொண்டதோடு விரைவில் பொன்னிக்கும் அவனுக்கும் திருமணத்தைச் செய்து வைத்தான்.





# நரியிடம் ஏமாந்த புலி!

**கா**ட்டில் ஒரு நரியும் ஒரு ஓநாயும் ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டு அரட்டை அடித்துக் கொண்டிருந்தன. அப்போது ஓநாய் நரியிடம் ''நீ எவ்வளவு படித்திருக்கிறாய்?'' என்று கேட்கவே நரியும் ''ஏதோ கொஞ்சம் படித்திருக்கிறேன்'' என்றது. அப் போது ஓநாய் ''நான் நிறையப் படித்திருக்கிறேன். அதனால் நீ இனிமேல் ஐயா என்று கூப்பிட்டே பேச வேண்டும் தெரிந்ததா?'' என்றது. உடனே நரியும் ''சரி ஐயா, அப்படியே கூப்பிடுகிறேன் ஐயா. சரிதானே ஐயா'' என்று கூறியது.

அதைக் கேட்டு ஓநாய் கர்வமாய்த் தலை தூக்கிப் பார்த்தது. அப்போது சற்று தூரத்தில் ஒரு புலி நின்று கொண்டிருந்தது. அதைக் கண்ட நரி ஓநாயிடம் ''ஐயா! புலி அங்கே நிற்கிறதே அது நம்மைப் பார்த்து விட்டால் நம்மீது பாய்ந்து கொன்று விடுமே ஐயா! இப்போது என்ன செய்வது ஐயா'' என்று கேட்டது. ஓநாயோ நடுநடுங்கி எதுவும் பேசாமல் இருந்தது.

புலி நரியையும் ஓநாயையும் பார்த்துவிட்டது. அதனால் அது அவற்றை நோக்கி வந்தது. அப்போது நரி அதன் முன் போய் ''ஐயா அறிவு மிக்க புலியாரே! வணக்கம்! உங்களைக் காணத்தான் நாங்கள் இருவரும் வந்து கொண்டிருந்தோம். எங்களுக்குள் ஒரு தகராறு. அதைக் கேட்டுவிட்டுத் தீர்ப்பு கூறுங்கள். நான் இரண்டு முயல்களைப் பிடித்துக் கொண்டு வந்து கொண்டிருந்தேன் அப்போது இந்த ஓநாய் என்னை வழிமறித்து ''நரியே! மரியாதையாக அந்த இரு முயல்களையும் எனக்கு கொடுத்துவிடு. நான் அறிவில் சிறந்த வன் என்பது தெரியாதா?'' என்றது. இதுதான் தகராறு. உங்களைவிடப் பெரிய அறிவாளி இந்தக் காட்டில் எதுவுமே இல்லையே'' என்றது.

- சுதா குமார் -



புலி ஓநாயைப் பார்த்து ''ஏய்! நீ என்ன படித்திருக்கிறாய்? பெரிய புத்திசாலியா?'' என்று கேட்டது. அப்போது ஓநாய் தன் பற்களைக் காட்டி அசட்டுச் சிரிப்பு சிரித்தது. அது கண்டு புலி ஏதோ சொல்ல முயல்கையில் நரி குறுக்கிட்டு ''ஓநாய் தன் வாயில் எவ்வளவு பற்கள் உள்ளனவோ அவ்வளவு வகுப்புகள் வரைப் படித்திருப்பதாகச் சொல்கிறது. ஆனால் அதைக் கூற பயப்படுகிறது'' என்றது. புலியும் ''ஓ! பயப்படுகிறதா? இருக்கட்டும். நான் அதைவிட அதிகம் படித்தவன். அதைத்தான் நீ முதலிலேயே சொல்லி விட்டாயே'' என்றது.

ஓநாயோ பயத்தால் நடுங்கிக் கீழே விழவே. நரியும் புலியிடம் ''பார்த்தீர்களா! நீங்கள் மிகப் பெரிய அறிவாளி என்பதால் அது உங்களை விழுந்து வணங்குகிறது. இனி அது என்னிடம் வால் ஆட்டாது. உங்களைக் கண்டு பயந்து விட்டதால் இனி முயல்களைப் பற்றி என்னிடம் பேசாது. எங்கள் தகராறும் தீர்ந்து விட்டது. எனக்கு நீங்கள் செய்த உதவிக்காக நான் பிடித்த முயல்களை உங்களுக்கே கொடுத்து விடுகிறேன்'' என்றது. புலியும் தன் மனதுள் ''பேஷ்! பேஷ்! முதலில் அந்த இரண்டு முயல்களைத் தின்றுவிட்டு, பிறகு இந்த ஓநாயையும் நரியையும் கொன்று விழுங்குகிறேன்'' என்று எண்ணி நரியிடம் ''சரி, வா நீ முயல்களை வைத்திருக்கும் இடத்திற்குப் போகலாம். அதற்கு வழியைக்

காட்டு'' என்றது. நரியும் புலியையும் ஓநாயையும் ஒரு குகைக்கு அழைத்துச் சென்றது. அந்த குகையின் நுழைவுவாசல் மிகவும் குறுகலாக இருந்தது.

நரி புலியிடம் ''இந்த ஓநாய் முதலில் உள்ளே போய் அந்த முயல்களை எடுத்து வரட்டும். நாம் இங்கே நின்று கொண்டிருப்போம்'' என்றது. புலியும் சரி எனவே ஓநாய் தன் உடலைக் குறுக்கிக் கொண்டு அந்த குகைக்குள் போய்விட்டது. வெகு நேரமாகியும் அது வெளியே வரவில்லை.

புலி பொறுமையை இழந்து நரியிடம் ''உள்ளே போன ஓநாய் அந்த இரண்டு முயல்களை எடுத்து வர ஏன் இவ்வளவு நேரம் எடுத்துக் கொள்கிறது?'' என்று கோபத்துடன் கேட்டது. அப்போது நரி புலியிடம் ''ஏனோ இந்த ஓநாய் வர இவ்வளவு நேரமாகிறது. நான் உள்ளே போய் அதையும் முயல்களையும் கூட்டிக் கொண்டு வருகிறேன். அதுவரை நீங்கள் இங்கேயே இருங்கள்'' என்றது. புலியும் ''சரி. சீக்கிரமே வந்துவிடு'' எனவே நரியும் குகைக்குள் போய் விட்டது.

வெகு நேரமாகியும் நரியும் ஓநாயும் குகையிலிருந்து வெளியே வராததால் புலி உறுமிக் கொண்டு குகையின் வாசல் வழியாக உள்ளே போக முயன்றது ஆனால் அந்தக் குறுகிய இடைவெளிக்குள் அதனால் தலையைக் கூட நுழைக்க முடியவில்லை. ஏமாந்து போய் அது ''அடடா! நரி என்னை விட புத்திசாலி. அது என்னிடம் பேச்சுக் கொடுத்து என்னை இந்த காட்டிலேயே அதிபுத்திசாலி என்று பகழ்ந்தது. அதனால் நான் மதிமயங்கி அதனிடம் ஏமாந்து போய்விட்டேன்'' என்று எண்ணிக் கொண்டு அங்கிருந்து போய்விட்டது புலி போய் வெகு நேரமான பிறகே நரியும் ஓநாயும் குகையிலிருந்து வெளியே வந்தன.

அப்போது ஓநாய் ''நீ என்னைவிட கெட்டிக்காரன்தான்'' என்று பாராட்டியது.





# கடைசியில் கட்டினான்!

ஒரு ஊரில் குப்பண்ணன் என்ற வியாபாரி இருந்தான். அவன் அல்லும் பகலும் பணம் சம்பாதிப் பதிலேயே குறியாக இருந்தான். அதனால் அவனிடம் லட்ச லட்சமாகப் பணம் சேர்ந்துவிட்டது. அப்போது அவனுக்கு வயதும் எழுபதைத் தாண்டிவிட்டது. ஒரு நாள் ஏதோ நோயால் படுத்த படுக்கையாகி விட்டான். இனி தான் பிழைக்க முடியாது என்று அறிந்து கொண்ட அவன் தன் ஒரே மகனான சிதம்பரத்திடம் ''மகனே! நான் தாராளமாக சம்பாதித்தும், தானம் தர்மம் என்று எதையுமே செய்ய வில்லை. அதனால் நீயாவது உன் காலத்தில் நல்லது செய். வியாபாரத் தில் கிடைக்கும் லாபத்தில் ஒரு சத்திரத்தைக் கட்டு'' எனக் கூறினான். சிதம்பரமும் அவ்வாறே செய்வதாகச் சொல்லவே குப்பண்ணன் நிம்மதி யுடன் உயிர்விட்டான். தந்தை இறந்தபின் சிதம்பரம் அந்த வியா பாரத்தைத் தொடர்ந்து நடத்தி வந்தான். அந்த வருடம் கொஞ்ச லாபமே கிடைத்தது. அடுத்த ஆண்டில் இதைவிட நிறையக் கிடைக்கும். அப்போது சத்திரத்தைக் கட்டலாம்'' என்று எண்ணினான். அடுத்த ஆண்டில் அவன் எதிர் பார்த்தது போல நிறைய லாபமே கிடைத்தது. அப்போதும் 'இதைவிட அதிக லாபம் அடுத்த ஆண்டில் கிடைக்கலாம். அதனால் அப்போது சத்திரத்தைக் கட்டுகிறேன்' என்று நினைத்தான். இப்படியே ஒவ்வொரு ஆண்டிலும் சத்திரம் கட்டுவது தள்ளிப் போடப்பட்டு வந்தது.

ஒரு நாளிரவில் அவன் தன் கணக்கு வழக்குகளைப் பார்த்துக் கொண்டு இருந்தான். அப்போது அவன் வீட்டின் எதிரே யாரோ முனகும் சத்தம் கேட்டது. ஜன்னல் வழியாக அவன் பார்த்தபோது பார்வை இழந்த

- 25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வெளியான கதை -

பிச்சைக்காரன் ஒருவன் தன் கப்பரையைக் கீழே போட்டுவிட்டுத் தடவித் தேடிக் கொண்டிருப்பது தென்பட்டது. அப்போது ஒரு நொண்டிப் பிச்சைக்காரன் அவனை அணுகி ''இரு, நான் எடுத்துத் தருகிறேன்'' என்றான்.

அப்போது குருட்டுப் பிச்சைக்காரன் ''அதனால் என்ன பயன்? ஒரே பசி. நேற்று முதல் சாப்பிட எதுவுமே கிடைக்கவில்லை'' என்றான் அதைக் கேட்ட மற்ற பிச்சைக்காரன் ''அப்படியா? கவலைப்படாதே எனக்குக் கொஞ்சம் சாதம் கிடைத்தது. அதைக் கொடுகிறேன்'' என்றான். அதைக் கேட்ட குருட்டுப் பிச்சைக்காரன் ''சரி. ஆனால் உன்னிடம் உள்ள சாதத்தை அப்படியே எனக்கே கொடுத்துவிடாதே. உன்னிடம் இருப்பதை நாம் இருவரும் பகிர்ந்து கொள்ளலாம்'' என்றான். நொண்டிப் பிச்சைக்காரனும் ''சரி அப்படியே செய்யலாம்'' என்று கூறி தன்னிடம் இருந்த சாதத்தைக் குருடனின் கப்பரையில் முழுவதும் போட்டு விட்டுப் பிறகு அதிலிருந்து இரண்டு பருக்கைகளை மட்டுமே எடுத்துத் தன் கப்பரையில் போட்டுக் கொண்டு ''சமமாகப் பங்கிட்டுவிட்டேன். இந்தா, உன் கப்பரை நீ சாப்பிடு. நானும் சாப்பிடுகிறேன்'' என்று சொல்லி குருட்டுப் பிச்சைக்காரன் கையில் அவனது கப்பரையை வைத்தான். பிறகு அவன் தன் கப்பரையிலிருந்து எடுத்துச் சாப்பிடுவது போல நடித்தான்.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த சிதம்பரத்தின் மனதில் புயலே வீசியது எனலாம். 'ஒரு பிச்சைக்காரனே மற்ற பிச்சைக்காரனுக்குத் தன் உணவு முழுவதையும் கொடுக்கிறான். ஆனால் நானோ கிடைத்த பணத்தை எல்லாம் பதுக்கி வைக்கிறேன் சத்திரம் கட்டுவதைத் தள்ளிப் போட்டுக் கொண்டே வருகிறேன். இது சரியல்ல' என்று எண்ணமிட்டான்.

மறுநாளே அவன் தன் தந்தையின் விருப்பப்படி சத்திரத்தைக் கட்ட ஆரம்பித்தான்.



# சூர்யா

6

வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்

மன்னனின் கட்டளைப்படி ராணி சாந்த குமாரி தன் கைக் குழந்தையுடன் சுரங்கப் பாதையில் சென்றாள். காட்டை அடைந்த அவள் தன் குழந்தையை ஜெயானந்த முனிவரிடம் ஒப்படைத்துவிட்டு இறந்து போனாள். முனிவர் அவளது உடலுக்குக் காவலாக இரு புலிகளை வைத்து விட்டுக் குழந்தையுடன் ஆசிரமத்தை அடைந்தார். அதை ஒரு கரடியிடம் கொடுத்துப் பார்த்துக் கொள்ளும்படிக் கூறினார்.

ஓவியம் : காந்தி அய்யா

மறு நாள் ஜெயானந்தரின் சீடர்கள் ராணியின் உடலை அடக்கம் செய்யப் பள்ளம் தோண்டலானார்கள்.

ராமா! பள்ளத்தை இன்னும் ஆழமாகத் தோண்டு.

கோவிந்தா! பள்ளத்தின் உள்ளே நான்கு புறங்களிலும் கற்களைச் சுவர் போலப் பதித்துவிடு.

குழந்தாய்! நீ இந்த வெண்மலர்களை உன் தாயின் உடலின் மீது போட்டு அவளது கால்களைத் தொட்டு வணங்கு.

ஜெயானந்தரின் சீடர்கள் ராணியின் உடலுள்ள சவப் பெட்டியைப் பள்ளத்துள் இறக்கினார்கள்.

அப்பெட்டியை மூடி அதைச் சுற்றி மண்ணை நிரப்புங்கள் ராணியின் உடலுக்கு எவ்விதத் தீங்கும் நேர்ந்துவிடக் கூடாது.




தலைநகரில் இளவரசனின் பிறந்த நாள் கொண்டாட்டம் திடீரென நின்றது கண்டு மக்கள் பிரமித்துப் போனார்கள்.

எல்லோரும் கேளுங்கள்! நம் நாட்டிற்கு ஏதோ கேடுகாலம். இதன் காரணம் தெரியவில்லை. மகாராஜா, மகாராணி, இளவரசர் ஆகியோர் காணவில்லை.

சேனாதிபதி வீரசிம்மன் தற்காலிக ஆட்சிப் பொறுப்பை மேற்கொண்டான்.




மகிழ்ச்சியான இரவு துயரமான செய்தியைக் கொடுத்து விடிய வைத்ததே!

இப்போது வீண் சர்ச்சை வேண்டாம். சொன்னபடி செய்யுங்கள்.

முதலில் அமைதியை நிலைநாட்டத் தானே வேண்டும்?

பேசக் கூடாது என்று அப்போதே சொன்னேனே!

வீரர்களே! இவனை இழுத்துச் செல்லுங்கள்!


என்னை அழைத்து வர வீரர்களை அனுப்பினாயா?
ஆமாம். ஆச்சாரியாரே! விரைவில் எனக்குப் பட்டாபிஷேகம் நடக்க வேண்டும்.
அதற்கு முகூர்த்தத்தைக் குறியும்.
அப்படியா! மன்னர் இல்லை என்று உறுதி ஆன பிறகே இந்தப் பட்டாபிஷேகம் பற்றி யோசிக்கலாம்.
அரசர் உயிருடன் இல்லை என்று தான் உறுதியாகி விட்டதே
யார் அங்கே? இவனைச் சிறையில் அடையுங்கள்.


தர்பார் கூடியதும் சேனாதிபதி அமைச்சரிடம் கூறினான்.
மாபெரும் அமைச்சர் மானவேந்திரரே! தாற்காலிக மன்னனாக நீண்ட நாட்கள் இருக்க முடியாது. எனக்குப் பட்டாபிஷேகம் செய்யுங்கள்.


சேனாதிபதி! நீ சில நாட்கள் பொறுத்திருப்பது நல்லது.
என்னைச் சேனாதிபதி என்றா சொன்னாய்? என்ன துணிச்சல் உனக்கு? நான்தான் மன்னன் என்பது தெரியாதா?


மக்களுக்கு எவ்விதக் குறையும் இல்லாமலும் நாட்டில் அமைதியையும் நிலைநாட்டி ஆள்பவனே மன்னன் நீ அப்படிப் பட்டவனே அல்ல!
நான் உன்னிடம் பணிபுரியமாட்டேன்.
ரொம்ப சரி. அஹ்ஹஹஹஹா!


இன்னும் யாராவது பதவிகளைத் துறந்து போக விரும்பினால் தாராளமாகப் போகலாம்.
ஆலோசனை அரங்கத்திலிருந்து வீரசிம்மனைத் தவிர மற்றவர்கள் யாவரும் சென்று விட்டார்கள்.


முதுபெரும் அமைச்சர் மானவேந்திரர் தம் வழக்கப்படி அன்று மாலை சிவன் கோவிலுக்குச் சென்றார்.


கோவிலிருந்து திரும்பி வருகையில் அவரை மூன்று பேர்கள் திடீரென்று தாக்கினார்கள்.


மறுநிமிடமே மின்னல் போல வந்த ஒரு வாள் அம்மூவர் தலைகளையும் வெட்டி வீழ்த்தியது.


நீங்களா!
பேச வேண்டாம். உடனே அமிர்த புரிக்குப் போ.
தொடரும்.

# உங்கள் பக்கங்கள் உங்கள் பக்கங்கள்

## உங்கள் அறிவியல்

### இண்டியம்

இண்டியம் மிருவானதும் வெள்ளியைப் போல் பளபளக்கும் உலோகம் அதை IN என்று ஆங்கில எழுத்துகளில் குறிப்பிடுவார்கள். அதன் மூலப் பொருள் எண் 49. அதன் அணு நிறை 114.82 இதனை 1863ல் எஃப். ரெய்ச்சும் எச்.ரிட்சரும் துத்தநாகத்தில் உள்ளதைக் கண்டு பிடித்தார்கள். இது வெள்ளி போலவே அரிதாகக் கிடைப்பது. இது இரும்பு, துத்தநாகம், ஈயம் ஆகியவற்றில் கலந்திருக்கும் இதன் மத்திய ஒளி வீசும் கோட்டால் இதற்கு இப்பெயர் கொடுக்கப் பட்டது.



பல வெப்ப நிலைகளில் இண்டியம் திரவமாகக் கூட இருக்க முடியும். வெள்ளியை விட இது மங்காது பளபளப்பாக இருக்கும் இது முகம் பார்க்கும் கண்ணாடிகளில் பயன் படுத்தப் படலாம்.

இதன் 'ஆக்ஸைட்' கண்ணாடி செய்யப்பயன்படுகிறது. மஞ்சள் நிறத்தை அதில் கொடுக்க பயன் படுகிறது.

இண்டியம் 'பேரிங்'களில் பூச்சுக் கொடுக்கவும் பயன் படுகிறது. அமிலங்களாலும் மற்றும் உராய்ப்பு களாலும் இது மாறாமல் உள்ளது. இதனை ட்ரான்சிஸ்டர்களில் பயன் படுத்துகிறார்கள்.

## உங்கள் சுற்றுப்புறம்

### ரயில் தொல்லைகளுக்கு முற்றுப் புள்ளி!



உங்கள் வீடு ரயில்ப் பாதை அருகே இருந்து தினமும் ரயில்களின் போக்கு வரத்தால் உங்கள் வீட்டினுள் தூசி பறந்து வந்து படிந்தால் அதை நீங்கள் சகித்துக் கொண்டு இருப்பீர்களா?

இதுபோல ரயிலில் பயணம் செய்பவர்கள் தமக்கு வேண்டாதனவற்றைத் தூக்கி வெளியே எறியும் போது அவை ரயில் பாதை ஓரங்களில் குப்பைகளாகச் சேர்ந்து விடுகின்றன.

பிளாஸ்டிக் கப்கள், பிளாஸ்டிக் தட்டுகள், பிளாஸ்டிக் பாட்டில்கள், பிளாஸ்டிக் பைகள், வாழைப்பழத் தோல்கள், முட்டை ஓடுகள் எனப் பல விதப் பொருள்களை ரயில் பயணிகள் ரயில் பாதை பக்கமாக வசிப்பவர்களைப் பற்றிச் சற்றும் கவலைப் படாமல் ரயில் பெட்டிகளிலிருந்து வெளியே எறிந்து விடுகிறார்கள். ரயில் பயணத்தின்போது உங்கள் டம்ளர்களில் காபியோ டீயோ வாங்கிக் கொள்ளுங்கள். பிளாஸ்டிக் கப்களை ஏற்க மறுத்து விடுங்கள்.

நீர் குடிக்க உங்கள் பாட்டில்களில் நீர் எடுத்துச் செல்லுங்கள். பிளாஸ்டிக் பாட்டில்களில் வரும் தண்ணீரை பயணத்தின் போது வாங்கவே வாங்காதீர்கள்.

# உங்கள் பக்கங்கள் உங்கள் பக்கங்கள்

## நீங்கள் அறிவீர்கள்

### ரோஜாவின் உபயோகங்கள்

தொன்றுதொட்டு கவிஞர்களும், இலக்கியப் படைப்பாளிகளும் காதலர்களும் காதலுக்கு அடையாளமாக, மலர்களின் ராணியான ரோஜாவைத்தான் கூறுகிறார்கள். ரோஜா மலருக்கு மேலும் பல இயல்புகளும் சேர்க்கைகளும் உள்ளன.

பல ஐரோப்பியர்கள் இம்மலரைப் பல ரகசிய சங்கேதங்களுக்குப் பயன் படுத்தினார்கள். இங்கிலாந்தில் பெரிய இடத்துப் பணியாட்கள் தம் காதுகளில் இந்த மலரை வைத்து தாம் ரகசியங்களை யாருக்கும் கூற மாட்டோம் எனத் தெரிவித்தார்கள். ஜெர்மனியில் உணவு உட்கொள்ளும் மேஜை மீது ஒருதட்டு நிறைய ரோஜா மலர்கள் வைக்கப்பட்டிருந்தால் விருந்தினர்கள் ஒளிவு மறைவு இன்றி எதையும் கூறலாம் என்பதற்கு அறிகுறியாம். எகிப்திய பரோஹ் மன்னர்கள் 5000 ஆண்டுகளுக்கு முன்பே ரோஜாச் செடிகளை வளர்த்தார்கள். ரோஜா ஐஸ்கிரீம்கள், சேலட்களில் சேர்க்கப் பட்டு சாப்பிடப்படுகிறது. ரோஜாப் பன்னீரும் ரோஜாத் தைலமும் மருந்துகளில் பல நூற்றாண்டுகளாகப் பயன் படுத்தப் பட்டு வருகிறது. இன்று ரோஜாத் தைலம் சோப், முகப்பவுடர், செண்ட், சர்பத் ஆகியவை தயாரிக்கவும் பயன்படுத்தப் படுகிறது.



## மேலும் அறிவீர்

### இது இயற்கை தொடர்பான விஷயம்

1. குழந்தைகள் 'டெட்டிபேர்' என்ற வகை பொம்மையைப் பெரிதும் விரும்புகிறார்கள். இது எந்த மிருகத்தின் உருவத்தைக் கொண்டுள்ளது?





2. பூமியில் முதலில் வளர்ந்தது எது? புல்லா, மரமா?



3. வெட்டுக் கிளிகளுக்குக் காதுகள் எங்கே உள்ளன?



4. ஒரே சமயத்தில் கழுகுகள் இறந்த ஒரு உயிரினத்தின் உடலைக் கொத்தித் தின்னுமா?



5. தவளைக்கும் சுருள் மீனிற்கும் உள்ள ஒற்றுமை என்ன?

**(விடைகள் 66ம் பக்கத்தில்)**

# போட்டோ வாக்கியப் போட்டி



**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**



SOURAA



SOURAA

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு பிப்ரவரி 2004 இதழில் வெளியிடப்படும்.
போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

**நவம்பர் 2003 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி வெற்றவர் :**
S.**அகிலா**
C/o ஆர். சேர்மக்கனி
ப்ளாட் நெ: 2440, ஹௌசிங் போர்டு,
வில்லாபுரம், மதுரை - 625011.

பரிசு பெற்றவை



குதித்தாடும் சுட்டி
குழலூதும் குட்டி.

### 'மேலும் அறிவீர்' விடைகள் (பக்கம் 65)

1. அமெரிக்க குடியரசுத் தலைவர் தியோடர் ரூஸ்வெல்ட் பிடித்த ஒரு கறுப்பு நிறக் கரடிக்குட்டி, 2. மரம் போன்ற தாவரமே புல்லுக்கு முன் தோன்றன, 3. அவற்றின் முன்னங்கால்களில் உள்ளபள்ளங்களில் இருக்கின்றன. முன்னங்கால்களை நீட்டி அவை ஒலிகளை உணர்கின்றன, 4. முதலில் வலிமை மிக்கக் கழுகு தான் கொத்தித் தின்னும் அதன்பின் மற்ற கழுகுகள் தின்னும், 5. சுருள் மீன் தவளையைப் போல தன் உடலின் சருமத்தால் சுவாசிக்கிறது.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)

